இலக்கியப் பயிற்சி:

# நவயுக வாசகம் ::
# :: கவிக் களஞ்சியம்

ஒன்று முதல் மூன்று படிவங்களுக்கு






தொகுத்தவர்:
இராவ்சாகிப், கு. அருணாசலக் கவுண்டர்
ம. தி. தா. இந்து காலேஜ், திருநெல்வேலி.




எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
...ிஷர் :: திருநெல்வேலி.

அணா 10.

இலக்கியப் பயிற்சி

# நவயுக வாசகம்
# கவிக் களஞ்சியம்

ஒன்றுமுதல் மூன்று படிவங்களுக்கு



தொகுத்தவர் :
இராவ்சாகிப், கு. அருணாசலக் கவுண்டர்
ம. தி. தா. இந்து காலேஜ், திருநெல்வேலி.







எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
பப்ளிஷர் : : : : திருநெல்வேலி

 [விலை ரூ. 0—10—0

## முன்னுரை

கவி என்பது ஒரு பெரிய கருவூலம் ; அரிய நிதி. அதனால், அது, (யாப்பு அணி என்ற) பெருங் கதவுகளால் அடைபட்டிருக்கின்றன. அந்தக் கதவுகளை எளிதிலே திறக்கும் சாவி இந்தச் செய்யுள் தொகுதி.

பொருளைத் தெரிந்து கருத்தை உணர்ந்து தெளிவான குரலில் கவிகளைப் படிக்கும் பயிற்சியை இதனால் அடையலாம்.

வாழ்த்து, வருணனை, தனிப்பாடல், கதை, அறநெறி என்ற தலைப்புக்களிலே தெரிந்தெடுக்கப்பட்ட எளிய இனிய கவிதைகளே இந்த வாசக மாலையில் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

திருநெல்வேலி,
20—4—'49

கு. அருணசலக் கவுண்டர்.



## பொருளடக்கம்

# 1. வாழ்த்து

## ஓம் சக்தி

ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்—பரா சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி—ஓம் சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்

கணபதி ராயன்—அவன் இரு
காலைப் பிடித் திடுவோம்
குணம் உயர்ந்திடவே—விடுதலை
கூடி மகிழ்ந் திடவே—ஓம் சக்தி

சொல்லுக் கடங்காவே—பரா சக்தி
சூரத் தனங்கள் எல்லாம்—
வல்லமை தந்திடுவாள்—பரா சக்தி
வாழி என்றே துதிப்போம்—ஓம் சக்தி

வெற்றி வடி வேலன்—அவனுடைய
வீரத்தினைப் புகழ் வோம்
சுற்றி நில் லாதே போ—பகையே
துள்ளி வருகுது வேல்—ஓம் சக்தி

—பாரதி

## காலை வணக்கம்

வாரும் ; வாரும், தெய்வ வடிவேல் முருகரே !
வள்ளி மணாளரே ! வாரும் ;
புள்ளி மயிலோரே ! வாரும்.
சங்கம் ஒலித்தது ; தாழ்கடல் விம்மிற்று ;
சண்முக நாதரே ! வாரும் ;
உண்மை வினோதரே ! வாரும்.
பொழுது விடிந்தது ; பொற்கோழி கூவிற்று ;
பொன்னான வேலரே ! வாரும் ;
மின்னார்முந் நூலரே ! வாரும்.
காகம் கரைந்தது ; காலையும் ஆயிற்று
கண்ணுதல் சேயரே ! வாரும் ;
ஒண்ணுதல் நேயரே ! வாரும்.
செங்கதிர் தோன்றிற்று ; தேவர்கள் சூழ்ந்தனர் ;
செங்கல்வ ராயரே ! வாரும் ;
எங்குரு நாதரே ! வாரும்.
வீணை முரன்றது ; வேதியர் சூழ்ந்தனர் ;
வேலா யுதத் தோரே ! வாரும் ;
காலா யுதத் தோரே ! வாரும்.

—இராமலிங்க சுவாமிகள்

## எங்கள் தமிழ்

இனிமைத் தமிழ்மொழி எமது !—எமக்(கு)
இன்பந் தரும்படி வாய்த்த நல் லமுது !
கனியைப் பிழிந்திட்ட சாறு !—எங்கள்
கதியில் உயர்ந்திட யாம் பெற்ற பேறு !
தனிமைச் சுவைஉள்ள சொல்லை !—எங்கள்
தமிழினும் வேறெங்கும் யாம்கண்ட தில்லை !
நனிஉண்டு நனிஉண்டு காதல்—தமிழ்
நாட்டினர் யாவர்க்குமேதமிழ் மீதில் !
இனிமைத் தமிழ் மொழி எமது !

—பாரதி தாசன்

## உற்றார் ஆர் உளரோ?

தலையே! நீ வணங்காய்—தலை
மாலை தலைக் கணிந்து,
தலை யாலே பலிதேரும்
தலைவனைத்
தலையே! நீ வணங்காய்

கண்காள்! காண்மின்களோ—கடல்
நஞ்சுண்ட கண்டன் தன்னை
எண்தோள் வீசிநின் றாடும்
பிரான் தன்னைக்
கண்காள்! காண்மின்களோ.

செவிகாள்! கேண்மின்களோ—சிவன்
எம்மிறை செம்பவளம்
எரிபோல் மேனிப் பிரான் திறம்
எப்போதும்
செவிகாள்! கேண்மின்களோ.

நெஞ்சே! நீ நினையாய்—நிமிர்
புன்சடை நின் மலனை
மஞ்சாடும் மலை மங்கை மணாளனை
நெஞ்சே! நீ நினையாய்

உற்றார் ஆர் உளரோ?—உயிர்
கொண்டு போம் பொழுது
குற்றாலத் துறை கூத்தன் அல்லால்
நமக்கு,
உற்றார் ஆர் உளரோ?

—நாவுக்கரசர்

## கலை மகள்

படிக நிறமும் பவளச் செவ் வாயும்
கடிகமழ் பூந் தாமரை போல் கையும்—துடி இடையும்
அல்லும் பகலும் அனவரத மும் துதித்தால்
கல்லும் சொல் லாதோ கவி.

—கம்பர்

## வந்து காணீர்!

சீதக் கடலுள் அமுதன்ன தேவகி
கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி, பிடித்துச் சுவைத் துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே ;
பவள வாயீர்! வந்து காணீரே.

மைத்தடங் கண்ணி யசோதை வளர்க்கின்ற
செய்த்தலை நீல நிறத்துச் சிறுபிள்ளை
நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய
கைத்தலங் கள் வந்து காணீரே ;
காரிகை யீர்! வந்து காணீரே.

நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்து நீ ராட்டும் இந் நம்பிக்கு
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்
மூக்கும் இருந்தவா காணீரே ;
மொய் குழ லீர்! வந்து காணீரே.

—பெரியாழ்வார்

# 2. வருணனை

## புயல்

மனைவி : காற்றடிக்குது, கடல் குமுறுது ;
கண்ணை விழிப்பாய், நாயகனே.
தூற்றல் கதவு சாளரம் எல்லாம்
தொளைத் தடிக்குது பள்ளியிலே.

கணவன் : வானம் சினந்தது, வையம் நடுங்குது
வாழி பரா சக்தி காத்திடவே ;
தீனக் குழந்தைகள் துன்பப் படா திங்கு
தேவி, அருள்செய்ய வேண்டுகின்றோம்.

மனைவி : நேற்றிருந் தோம்அந்த வீட்டினிலே, இந்த
நேரம் இருந்தால் என் படுவோம் ?
காற்றென வந்தது கூற்றம்இங்கே ; நம்மைக்
காத்தது தெய்வ வலிமை அன்றோ ?

—பாரதி

## சந்திரன்

மீனினம் ஓடிப் பரக்குதம்மா—ஊடே
வெள்ளி ஓடம் ஒன்று செல்லுதம்மா
வானும் கடலாக மாறுதம்மா—இந்த
மாட்சியில் உள்ளம் முழுகுதம்மா.
சின்னஞ் சிறுவில்லாய்க் கண்டதம்மா—பின்னர்
செம்பொற் குடம் போலே தோன்றுதம்மா
என்ன அதிசயம் பாராய்அம்மா—ஈதோர்
இந்திர சாலமோ கூறுய்அம்மா.
வளர்ந்து வளர்ந்து பெருகுதம்மா—உடல்
வாட்டந் திருந்தி வருகுதம்மா
தளர்ந்து தளர்ந்துபின் போகுதம்மா—கண்ணில்
சற்றுந் தெரியாமல் ஆகுதம்மா.
பாலாழி மீது படர்ந்த வெண்ணெய்—ஒரு
பந்தாய் உருண்டு திரண்டதுவோ ?
மேலாய் உலகில் ஒளி செயவே—ஈசன்
விண்ணகம் இட்ட விளக்கிதுவோ ?

—தேசிக விநாயகம் பிள்ளை.

# சிரிப்பு

ஆனந்த மான சிரிப்பு—எங்கள்
அருமை மணியின் சிரிப்பு.
ஈனமில்லாத சிரிப்பு—எங்கள்
இன்ப மணியின் சிரிப்பு.
கானம் நிலவும் சிரிப்பு—எங்கள்
கண்ணின் மணியின் சிரிப்பு.
வானத்துத் தேவர் மகிழும்—எங்கள்
வாழ்வு மணியின் சிரிப்பு.
துன்பங்கள் நீங்கும் சிரிப்பு—உளத்
துயரங்கள் போக்கும் சிரிப்பு.
இன்பங்கள் ஆக்கும் சிரிப்பு—எங்கள்
இதய மணியின் சிரிப்பு.
முன்பு தவங்கள் செய்துற்ற—எங்கள்
முத்து மணியின் சிரிப்பு.
வன்புக ளற்ற சிரிப்பு—எங்கள்
வைர மணியின் சிரிப்பு.
கள்ளம் கபடற்ற சிரிப்பு—எங்கள்
காதல் மணியின் சிரிப்பு.
விள்ளற் கரிய சிரிப்பு—எங்கள்
வீட்டு மணியின் சிரிப்பு.
துள்ளிக் குதிக்கும் சிரிப்பு—எங்கள்
ஜோதி மணியின் சிரிப்பு.
வெள்ளத்தைப் போலின்பம் பொங்கும்—எங்கள்
வேந்தன் மணியின் சிரிப்பு.
நிலவொளி செய்யும் சிரிப்பு—எங்கள்
நீல மணியின் சிரிப்பு.
புலவர்கள் போற்றும் சிரிப்பு—எங்கள்
புதிய மணியின் சிரிப்பு.
கலகல என்ற சிரிப்பு—எங்கள்
கட்டி மணியின் சிரிப்பு.
நலமிகும் தெய்வச் சிரிப்பு—எந்த
நாளும் வாழிய சிரிப்பு.

—பரலி. சு. நெல்லையப்பர்.

# 3. தனிப்பாடல்

*ஔவை ஆடு கேட்டது :*

வாதவர்கோன் பின்னை என்றான் ; வத்தவர்கோன் நாளை
என்றான்
யாதவர்கோன் யாதொன்றும் இல்லை என்றான் ; ஆதலால்
வாதவர்கோன் பின்னையினும், வத்தவர்கோன் நாளையினும்
யாதவர்கோன் இல்லை இனிது.

*ஔவை பூதனைப் போற்றியது :*

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரஎன் றேபுளித்த மோரும்—பரிவுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்புரிந் திட்டசோறு
எல்லா உலகும் பெறும்.

*திருவாரூர் நாகராசநம்பி செய்த குற்றம்*
*கிள்ளைக்குச் சொல்லுவித்துத் தலத்தார்*
*இராயருக்கு அறிவித்தது :*

முன்னாள் அறுபத்து மூவர் இருந் தார் ; அவரில்
இந்நாள் இரண்டுபேர் ஏகினர்—கன்னான்
நருக்குகின்றான் ; விற்றுவிட்ட நாகராச நம்பி
இருக்கின்றான், கிருட்டிண ரா யா !

*புலமைப் பொலிவு :*

காசுக்குக் கம்பன் ; கருணைக்(கு) அருணகிரி
ஆசுக்குக் காளமுகில் ஆவனே—தேசுபெறும்
ஊழுக்குக் கூத்தன் ; உவக்கப் புகழேந்தி
கூழுக்(கு) இங்(கு) ஔவை எனக் கூறு.

*சத்திரத்துச் சாப்பாட்டைக் காளமேகம் இகழ்ந்தது :*

கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசிவரும்—குத்தி
உலையிலிட ஊரடங்கும் ; ஓரகப்பை அன்னம்
இலையிலிட வெள்ளி எழும்.

*தம்மை இகழ்ந்த ஊர் அழியக் காளமேகம் வசை பாடியது :*

கோளர் இருக்கும்ஊர் ; கோள்கரவு கற்ற ஊர்
காளைகளாய் நின்று கதறும் ஊர்—நாளையே
விண்மாரி அற்று, வெளுத்து மிகக் கறுத்து
மண்மாரி பெய்க இந்த வான்.

## அனுபவ ஞானம்

சித்திரமும் கைப்பழக்கம் ; செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம் ; நித்தம்
நடையும் நடைப் பழக்கம் ; நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்.

விரகர் இருவர் புகழ்வாரும் வேண்டும் ;
விரல் நிறைய மோதிரங்கள் வேண்டும் ;—அரையிலொரு
பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் ; அவர் கவிதை
நஞ்சேனும் வேம்பேனும் நன்று.

ஏரும் இரண்டுளதாய், இல்லத்தே வித்துளதாய்,
நீரருகே சேர்ந்த நிலமுமாய்,—ஊருக்குச்
சென்றுவர அணித்தாய்ச், செய்வாரும் சொற்கேட்டால்
என்றும் உழவே இனிது.

—ஔவையார்

## போலி வேடம்

காதிலே திருவேடம் ; கையிலே செபமாலை ;
கழுத்தின் மார்பின்
மீதிலே தாழ்வடங்கள் ; மனத்திலோ கரவடமாம்
வேடம் ஆமோ ?
வாதிலே அயன்தேடும் தண்டலைநீள் நெறியாரே !
மனிதர் காணும்
போதிலே மவுனம் இராப் போதிலே ருத்ராக்கப்
பூனை தானே.

—தண்டலையார் சதகம்

# 4. கதைப்பகுதி

## 1. காந்திமகான் கதை

*தென்னுப்பிரிக்கா தேசத்திலே*

ஆப்பிரிக்காவில் உள்ள(து) அய்யா
அப்துல் கம்பேனி

அங்கே நிறையத் தொழிலும் துறையும்
அவுங்களுக்கே உண்டு.

அவுங்க தரப்பிலே கேசுக்காக
ஆசராகும் வக்கீல்

அத்தனை பேருக்கும் கட்டுப் படிக்க
ஆளு வேணும் என்றே,

ஆப்பிரிக்காவுக்குக் காந்தியைக் கூட்டி
அனுப்ப வேணும் என்ருர்.

அண்ணந்தம்பியும் ஒத்துப் பேசி
ஐயன் புறப் பட்டார்.

ஆப்பிரிக்காவில் நெறத்துவேசம்
ஆட்டம் போட்டதுபார் ;

அந்தஊரிலே கோரட்டு தன்னில்
ஐயன் போனதுமே.

இரண்டாம் வகுப்பு வண்டியி லொருநாள்
இருண்ட வேளைதனிலே,

ஈறும் பல்லும் விட விடக்குது
இருளும் பனிக் கூதல் ;

காசு கொடுத்தே டிக்கட்டு வாங்கின
கருப்புக் காந்தி தன்னை,

கையைப் புடிச்சே இழுத்துத் தள்ளினுன்
காவல் வெள்ளை போலீஸ் ;

கருப்புப் பூடுசால் எட்டி உதச்சான்
காந்தி மகாத்மா மேல் ;

கட்டின தலைப்பா தட்டிவிட் டானும்
காந்தி மகாத்மா மேல் ;

சாந்தம் பொங்கி வழியுது ஐயா
காந்தி மகானுக்கு.

சனங்களைக் கண்டு கருணை பெருகுது
காந்தி மகானுக்கு.

வெள்ளைக் காரர் அம்பட்டன் மயிர்
வெட்ட மாட்ட முண்ணுன் ;

வேட்டி வெளுக்கும் வண்ணுன் சலவை
நீட்ட மாட்ட முண்ணுன் ;

தானே சலவை செஞ்சிக் கிட்டாராம்
சாந்த மகாத்மாஜீ.

தானே சவரமும் செஞ்சிக் கிட்டாராம்
காந்தி மகாத்மாஜீ.

கரப்பாம் பூச்சி கடிச்சாப் போலே
கிராப்பு வெட்டிக் கிட்டார் ;

கழுத்துப் பட்டையில் மாவைத் தடவி
கலந்து ஒட்டிக் கிட்டார் ;

கோரட்டுக் குள்ளே கூட்டம் பார்த்துக்
குலுங்கச் சிரிச் சதுவாம் ;

கொள்கைக்காக இம்மியும் விட்டுக்
கொடுக்க மாட்ட முன்னுர்.

போயரு யுத்தம் வந்து சேரவே
பொது சன சேவை செய்தார்.

குண்டு மாரியில் இருந்து கொண்டே
தொண்டு செய்து வந்தார்.

ஆப்பிரிக்காவின் வெள்ளையன் மட்டும்
அசைஞ்சு கொடுத்தானே ?

அதனுலென்ன கருப்புக் காந்தியும்
அசஞ்சு கொடுத்தாரோ ?

சாத்து மீகப்போ ராட்டஞ் செய்வதாய்
சவாலு விட்டா ராம் ;

சட்ட மறுப்புச் செய்து கொண்டே
சனங்கள் கட்சி சொன்னுர்.

எத்தனையோதரம் 'செயிலிலே' வச்சும்
எண்ணம் சாக வில்லை ;

இரக்கம் இல்லாமல் அடிச்சுப் போட்டும்
இயக்கம் போக வில்லை ;

இந்தப் படியே இருபது வருசம்
இருந்து பாடு பட்டு,

இந்தியனுக்கு எதிரிடையாக
இருந்த சட்டம் எல்லாம்,

கருப்பன் வெள்ளையன் இருவரும் ஒத்தைக்
காயிதத்தின் மேலே,

கைநாட்டிட்டு நிறத்துவேசம்
கதறியோடச் செய்தார்.

அகிம்சா தத்துவ போதனை செய்ய
ஐயன் காந்திக்கு

ஆப்பிரிக் காவே அடிப்படை ஆகி
அஸ்தி வாரம் ஆச்சு.

—கொத்தமங்கலம் 'சுப்பு'.

## 2. புல்

[புல் தனது சரிதத்தைத் தானே கூறுகின்றது.]

பசும்புல் என் பெயர். பட்ட பாடெல்லாம்
ஒருபெருங் கதையாம், உரைப்பதும் எளிதோ ?
விரிவிடம் படுமொரு வீட்டின் முன்றிலில்
வளர்ந்தேன், அங்குள்ள மனிதரோ கொடியர்.
தத்தம் மக்களும் தாமுமே என்றும்
பெற்றுப் பெருகிப் பெருங்குடி யாகி
வாழக் கருதுவர், வகுத்திட லென் ? அவர்
வாயிற் படியில் வாடி வணங்கி
வயிற்றிற் கின்றிநா வறண்டு ' தண்ணீர்
தண்ணீர் ' என்று தவித்துத் தவித்து
வாணு ளெல்லாம் வருந்தி நொந்தேன்.
குடிக்க நீரும் கொடுத்திலர் பாவிகள்.
விண்ணி லிருப்பினும் மண்ணில் யான்படும்
வருத்தமும் வாட்டமும் கண்டவ் வானம்
அளித்த தமுதம் ; ஆர வுண்டனன்.
விசும்பில் துளிகள் வீழி னல்லால்
பசும்புல் தலைஇப் பாரிற் காணுமோ ?
கேளீர் கதையினும் : கிடைத்த நீரை
அருந்திப் பலநாள் அயர்வும் நீங்கித்
தெளிந்து நிமிர்ந்தேன். சிறிதென் உடலில்
பச்சையும் பிடித்தது. பார்த்தனர் பாவிகள்.
தரிக்கிலர் உள்ளம். தழைக்கும் தலையைக்
காலால் மிதித்தனர் ; கழுத்தையும் அறுத்தனர்.
ஆட்டையும் மாட்டையும் அடித்து மேய்த்தனர்.
படர்ந்த இடமெல்லாம் பாழே யாக்கினர்.
இருந்த இடமும் இல்லா தியற்றினர்.
உயிரும் உடலும் குறுகி, ஒருசிறு
வேராய்த் தரையுள் வெகுநா ளாக
ஒளித்திருந் தேன். அவ் வுறைவிடந் தேடி,
வான்மழைத் தோழன் வந்தெனைக் கண்டு,

'அறிவிலி போலும் நீ! அஞ்சேல் அஞ்சேல்.
யாவையும் காப்பவன் ஈசன்' என்றெல்லாம்
தேற்றிய மொழியெனக் கூற்றமும் உறுதியும்
பெரிதும் அளித்தது. பெயர்த்தும் மெலமெலத்
தலையெடுத் தேன்; அதைத் தறுகணர் கண்டு
பிடித்தனர் வெட்டினர் பிடுங்கி எறிந்தனர்;
சாணியைக் கரைத்துத் தலையில் கொட்டினர்;
துடைப்பங் கொண்டு துரத்தி யடித்தனர்.
யாவும் சகித்தங் கிருந்தனன். என்செய்வேன்?
தளர்ச்சி யுற்றிலேன். தகும்நற் காலம்
வருமெனச் சற்று மறைந்து தங்கினேன்.
ஐவரை விடயான் அதிபல சாலியோ?
மறைந்து சின்னுள் வாழுங் காலை,
ஒருதினம் வீட்டில் உள்ளார் அனைவரும்
உறவினர் இருக்கும் ஒரூர் சென்றனர்.
வெகுநா ளாகியும் மீண்டிலர். யானும்,
இதுவே தருணம் என்று நினைத்து,
விரைவின் வளர்ந்து, விரும்பிய படியெலாம்
தழைத்துச் செழித்துச், சார்விட மெங்கும்
படர்ந்து பற்றிப் பல்கிளை யாகி,
வாய்த்தஇவ் வித்தாம் மக்களைப் பெற்று
வாழ்ந்திருக்கின்றேன். மற்றவர் வாழும்
வீட்டையும் இடித்து விடும்வலி இந்நாள்
எனக்குண் டாயினும், இழிவென விடுத்தேன்.
செய்பிழை யாவும் தெரிந்து பொறுத்தேன்.
பொறுத்தவர் என்றும் பூமி யாள்வார்,
எனக்குச் சொந்தம் இல்லா இடமெதாம்?
புல்லே யாயினும் புல்லிய குணமிலை.
அற்பர் இகழினும் அறிவால் பொறுப்பேன்.
தலையில் மிதிப்பினும் தயவால் சகிப்பேன்.
முயற்சி கைவிடேன். முயற்சி கைவிடாத்
திறமுடை யோரைத் திருமகள்
பெரிதும் உவந்து பேணமுன் நிற்குமே.

—சி. தேசிக விநாயகம் பிள்ளை

## 3. மாதாவும் மகவும்

‘துணிவுடைச் சிறுநர! சொல்லுதி இன்னே.
உன்னுற் பெறலாம் ஊதியம் என்னே?
என்பயன் நின்னுல் என்பதறியேன்?
சொல்ல வல்லேயேல், சொல்லுதி ஒல்லே.
தாமரை இதழெனத் தயங்குகை விரலாய்!
திங்களேச் சூழ்ந்து திகழ்கரு முகில்போல்
சுந்தர வதனஞ் சூழ்ந்து தொங்கி
இருண்டு சுருண்டெழில் எறிக்குங் குஞ்சியாய்!
ஒருநாள் போல உறுபல நாளும்நீ
செய்சிறு குறும்புக் கெய்தள விலேயால்;
யாவது நின்னுல் ஆவ தென்ன
உன்னுற் சொல்ல ஒல்லும் என்னில்,
நன்குசிந் தித்து நவிலுதி வல்லே’
என்றேன்; என்றலும், இருசிற் றடிகள்
குறுகுறு நடந்தெனேக் குறுகிஎன் மடிமேல்
உற்றன; மிகுகளி ஒளிர்எழில் இளவிழி
கூர்ந்தெனே நோக்கின; குறுநகை அரும்பின;
இருசிறு செங்கைகள் என்னிரு கதுப்பினே
இறுகுறப் பற்றிஈர்த் தினிதின் அணேத்தன;
‘உனது வினவுக் குறுவிடை கேட்டி;
அன்னுய்! யான்உனக் கன்பு செய்தலே
என்னு லாம் பயன்’ எனல் போல்
பவளவாய் திறந்ததென் பாக்கியந் தானே.

—ராவ்சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ஜி. பி. வி. சி.

## 4. சோம்பேறிப் பையன்

ஊரும் எறும்பே ! ஒருமணி நேரம்
ஒளித்து விளையாட வாராயோ ?
நேரமில்லை ; மழைக்காலம் நெருங்குமுன்
நெல்மணி சேர்த்திட வேண்டும் அப்பா.

மாமலர்தோறும் திரியும் வண்டே !—பாண்டி
வட்டாட என்கூட வாராயோ ?
ஆமிந்த வேளை அலர்மலர் மூடுமுன்
அள்ளித்தேன் சேர்த்திட வேண்டும் அப்பா.

காகமே ! கால்மணிநேரம் என்னோடு
களித்து விளையாட வாராயோ ?
ஆகா ! நேரம்எனக் கில்லை அப்பா—மழைக்
காகும் கூடுகட்ட வேண்டும் அப்பா

ஓடுசிற்றாறே ! ஒரு நிமிஷம் விளை
யாட உவந்துநீ வாராயோ ?
நாடு செழிக்கநன் னீர்விட வேண்டும் ; என்
நண்பனே ! போ தெனக் கில்லைஅப்பா.

வானத் துலாவிடும் சூரியனே ! கீழே
வந்துவிளை யாடவா ராயோ ?
போனகம் கொள்ளவும் நேரமில்லை ; புத்தி
கெட்ட பையா வரமாட்டேன் அப்பா.

ஓகோ இதுஎன்ன ஒருவரும் என்கூட
ஓடி விளையாட வாராரோ ?
ஆகாத பிள்ளையோ நான்மட்டும் அந்தப்பேர்
அண்டாமல் பார்த்திட வேண்டும் இனி.

—எஸ். முத்துசாமிப் பிள்ளை

## 5. கெடுவான் கேடு நினைப்பான்

வளமுறு மகத நாட்டில்,
சண்பக வனத்தில் மன்னி,
உளமகிழ் கொடியும், மானும்
உறவு கொண்டிருக்கும் காலைக்
கொளும் இளம் புல்லால் மான் மெய்
கொழுத்திடும் இயல்பு நோக்கிக்
களமிகு நரி யொன் றுள்ளக்
கபடத்தாற் கொல்ல எண்ணி,
துன்னிய மான்பாற் சென்(று) ' என்
நண்ப ! நீ சுகமே ? என்ன
அன்னதைக் கேட்டு, ' நீ யார் ?'
என்றலும், ' அறியோய் ! யான் இக்
கொன்னுறு வனத்தில் வாழ்வேன் ;
குத்திர புத்தி என் பேர் ;
பன்னிய கிளையொன் றில்லாப்
பாவியாய்த் திரிந்து நின்றேன்.
' இன்றுனைக் கண்டு நெஞ்சத்
தெய்தினேன் உவகை ; இப்போ(து)
உன்றிருப் பணி செய்(து) உன்பால்
உற்றிட விழைந்தேன் ? ' என்ன ;
நன்றென இசைந் திரண்டும்
நண்ணு சண்பகத்தின் கீழே
துன்றின ; அதன் மேல் உற்ற
சுபுத்தியாம் காகம் கண்டே,
' மித்திர மானே ! நின்பால்
மேவினுன் யாவன் ? ' என்னப் ;
' பத்தியிற் சிநேகஞ் செய்யப்
படர்ந்த சம்புகன் ' என்றுரைத ;
' அத்தகை யான்றன் செய்கை
குலத் தொடும் ஆரா யாமல்
மத்திய திட நாம் ஈகை
தகாதது வழங்கல் செய்தால் '

என்னலும், அந்நரி அது கேட்(டு)
‘இவற்குநீ ! நட்பு செயும்
முன்னமே நின் இயல்பு
தெரியுமோ ? மொழிதி !’ என்னப்,
பின்னர் மான் காகத்தின்
மனம் ஒருமை பெறப் புரியத்
துன்னிய இம் மூன்றும் அருந்
தொடர்பு கொடு நின்றனவே.

ஆயதினந்தனில், ஒரு நாள்
மானைப் பார்த்(து) அந்த நரி
‘மேயும் இளம் பயிர் உனக்கு
வேண்டு மட்டும் அருந்துமிடம்
நீ அறிதி !’ எனக் காட்ட,
அன்று முதல் நெடிய மான்
போய், அதனை மேய்ந்து, பசி
போக்கி, இருந்திட்டதுவே.

பயிரிட்டோன், இது கண்டு
வலை கட்டப் பாராது
செயிர் இட்ட மான் வழக்கப்
படி சென்று சிக்குண்(டு) ‘என்
உயிரிட்ட நண்பன் அலா(து)
உயச் செய்வார் யார் ?’ என்று,
தயிரிட்டமத் தென்னத்
தனது மனம் சுழல் காலை,

வன்பினெடு நரி கண்(டு), ‘இன்று
எண்ணம் எல்லாம் வாய்த்ததினித்
துன்பற இன்(று) இதன் எலும்பைத்
தசை யினெடு சுவைத் துண்டே
இன்பி னெடும் உறலாம்’ என்(று)
எண்ணி வாளா திருப்ப
அன்று றுமான் கண்(டு) ‘இங்கென்
தனை விடுவி !’ என அறைய,

நரியது கேட்(டு) ‘ இன்றைக்கோர்
விரத தினம் ; நாளை எனில்
பரிகரிப்பன் நினது தளை
பகர் தரு தோல் ஆதலினுல் ;
பிரியம் உறு நட்பினர்க் கென்
பிராணனையும் விட வல்லேன் ;
தெரிகிலையோ நீ ! ’ என்றோர்
செடியின் மறைந் திருந்ததுவே.

காகமது மித்திரனைக்
காணுமல், அன்றிரவு
சோகமுற் றெங்கணுந் தேடித்
தோல் வலையிற் பட்டதறிந்(து),
‘ ஊக முடை மானே ! இங்(கு)
உற்றுழல்வ(து) என் ? ’ எனலும்,
‘ நிகழரும்உரை கேளா
மையின் வந்த நிலை இதுவே ’ ;

நண்பு கொண்ட நரி எங்கே ? ’
என, ‘ எனது நல்லிறைச்சி
உண்பதற்கோர் செடியின் கீழ்
ஒளித்திருந்தது ’ எனப் புகல
பண்புறுகா காகம் கேட்டுப்
‘ பயிர்க் கதிபன் உறுகின்றுன் ;
மண் படும் ஆருயிர் கழிந்த
வடிவம் போல் உறு(க), ’ எனலும்,

நண்ணிய அப் பயிர்க் கதிபன்,
உயிர் கழிந்த தௌ வினன
எண்ணி இதை இழுத் தங்கு
வலை கட்டும் எல்வை யினில்,
மண்ணின் விரைந் தோடுதலும்,
தண்டம் அவன் வலிந் தெறியத்
திண்ணிய தோர் செடியின் கீழ்
இருந்த நரி சிதைந்ததுவே.

—வீரமார்த்தாண்டத் தேவர்.

# 5. அறநெறி

## துர்ச்சனர்

ஈக்கு விடம் தலையில் எய்தும்; இரும் தேளுக்கு
வாய்த விடம் கொடுக்கில் வாழுமே;—நோக்கரிய
பைங்கண் அர வுக்கு விடம் பல்லளவே; துர்ச்சனருக்கு,
அங்கம்முழு தும் விடமே ஆம்.

துர்ச்சனரும் பாம்பும் துலைஒக் கினும், பாம்பு
துர்ச்சனரை ஒக்குமோ தோகையே!—துர்ச்சனர்தாம்
எந்தவிதத் தாலும் இணங்காரே; பாம்பு மணி
மந்திரத்தால் ஆகுமே வசம்.

கொம்(பு) உளதற்(கு) ஐந்து; குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக்கு ஆயிரம்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கிணர்தம் கண்ணில் தெரியாத தூரத்தே
நீங்குவதே நல்ல நெறி.

—நீதிவெண்பா

## வயிற்றுப் பிழைப்பு

சேவித்தும், சென்றிரந்தும், தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும், பாராண்டும், பாட்டிசைத்தும்,—போவிப்பம்
பாழின் உடம்பை; வயிற்றின் கொடுமையால்,
நாழி அரிசிக்கே நாம்.

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடரே! கேளுங்கள்—கூடுவிட் டிங்(கு)
ஆவிதான் போயினபின்(பு) ஆரே அனுபவிப்பார்?
பாவிகாள்! அந்தப் பணம்.

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை, பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை;—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியாது
உயிர் விடுகை சால உறும்.

—நல்வழி

## இனியன

மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிதே ;
தானம் அழியாமை தான் அடங்கி வாழ்வினிதே ;
ஊனம் ஒன் றின்றி உயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லாம் இனிது.

யானை உடைய படை காண்டல் மிக இனிதே ;
ஊனைத்தின்(று) ஊனைப் பெருக்காமை முன் இனிதே ;
கான்யாற்(று) அடைகரை ஊர் இனி(து) ; அங்கினிதே
மானம் உடையார் மதிப்பு.

கற்றார்முன் கல்வி உரைத்தல் மிகஇனிதே ;
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்இனிதே ;
எட்டுணை யானும் இரவாது, தானீதல்
எத்துணையும் ஆற்ற இனிது.

கயவரைக் கை இகந்து வாழ்தல் இனிதே ;
உயர்வுள்ள ஊக்கம் பிறத்தல் இனிதே ;
எளியர் இவர் என்று இகழ்ந்(து) உரையார் ஆசி
ஒளிபட வாழ்தல் இனிது.

—இனியவை நாற்பது

## இன்னாதன

ஆற்றல் இலாதான் பிடித்த படை இன்னா ;
நாற்றம் இலாத மலரின் வனப்பின்னா ;
தேற்றம் இலாதான் துணிவு இன்னா ; ஆங்கின்னா
மாற்றம் அறியான் உரை.

பொருள் உணர்வார் இல்வழிப் பாட்டுரைத்தல் இன்னா ;
இருள் கூர் சிறுநெறி தாந்தனிப் போக்கின்னா ;
அருள்இலார் தங்கண் செல வின்னா ; இன்னா
பொருள் இலார் வண்மை புரிவு.

ஆன்றமைந்த சான்றோருள் பேதைபுகல் இன்னா ;
மான்(று) இருண்ட போழ்தின் வழங்கல் பெரிதின்னா ;
நோன்றமைந்து வாழாதார் நோன்பின்னா ; ஆங்கின்னா
ஈன்றாளை ஓம்பா விடல்.

—இன்னா நாற்பது.

# 1. வாழ்த்து

## கேட்பன

நல்லதோர் வீணை செய்தே—அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ ?
சொல்லடி சிவசக்தி !—எனைச்
சுடர்மிகும் அறிவுடன் படைத்துவிட்டாய் ;
வல்லமை தாராயோ—இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே ?
சொல்லடி சிவசக்தி !—நிலச்
சுமைஎன வாழ்ந்திடப் புரிகுவையோ ?
விசையுறு பந்தினைப்போல்,—உள்ளம்
வேண்டியபடி செலும்உடல் கேட்டேன் ;
நசையறு மனங்கேட்டேன் ;—நித்தம்
நலமெனச் சுடர்தரும் உயிர் கேட்டேன் ;
தசையினைத் தீச்சுடினும்—சிவ
சக்தியைப் பாடுநல் லகங் கேட்டேன் ;
அசைவறு மதிகேட்டேன்—இவை
அருள்வதில் உனக்கெதும் தடை உளதோ ?

—பாரதி

## காலைப் பாட்டு

இரவு விடிந்தது ; இணையடி வாய்த்தன;
'பரவி மகிழ்ந் தேன்' என்(று) உந்தீ ! பற.
'பாலமு(து) உண் டேன்' என் றுந்தீ ! பற.

பொழுது விடிந்தது ; பொற்பதம் வாய்த்தன
'தொழுது மகிழ்ந் தேன்' என் றுந்தீ ! பற.
'தூயவன் ஆனேன்' என் றுந்தீ ! பற.

தூக்கம் தொலைந்தது ; சூரியன் தோன்றினன் ;
'ஏக்கம் தவிர்ந் தேன் !' என் றுந்தீ ! பற.
'இன்னமு துண் டேன்' என் றுந்தீ ! பற.

உள்ளிருள் நீங்கிற்(று) ; என் உள் ஒளி ஓங்கிற்று ;
'தெள்ளமுதுண்டேன்' என் றுந்தீ ! பற.
'தித்திக்கஉண் டேன்' என் றுந்தீ ! பற.

எந்தையைக் கண்டேன் ; இடரெலாம் நீங்கினேன் ;
'சிந்தை மகிழ்ந் தேன்' ; என் றுந்தீ !பற.
'சித்திகள் பெற் றேன்' என் றுந்தீ ! பற.

—இராமலிங்க சுவாமிகள்

## இன்பத் தமிழ்

தமிழுக்கும் அமுதென்றுபேர் ;—அந்தத்
தமிழ்இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்.
தமிழுக்கு நிலவென்றுபேர் ;—இன்பத்
தமிழ்எங்கள் சமுகத்தின் விளைவுக்கு நீர்.
தமிழுக்கு மணம் என்று பேர் ;—இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்.
தமிழுக்கு மது என்று பேர் ;—இன்பத்
தமிழ் எங்கள் உரிமைச்செம் பயிருக்கு வேர்.
தமிழுக்கும் அமுதென்று பேர்

—பாரதி தாசன்

## கலைமகள்

என்னை உடையாள் கலை மடந்தை ; எவ்வுயிர்க்கும்
அன்னை உடைய அடித்தளிர்கள்,—இன்னளி சூழ்
மென் மலர்க்கே தங்கும் என உரைப்பர் ; மெய்யிலா
வன் மனத்தே தங்குமோ வந்து.

—தண்டி

## திருமால்

என்றும் திருமாற்கே ஆளாவேன் ; எம் பெருமான்
என்றும் எனக்கே பிரான் ஆவான் ;—என்றும்,
பிறவாத பேராளன் பேரா யிரமும்
மறவாது வாழ்த்துக என் வாய்.

—பழம் பாடல்

## தேவாரம்

செல்வ நெடு மாடம் சென்று சேண் ஓங்கி
செல்வமதி தோய்ச் செல்வம் உயர் கின்ற
செல்வர் வாழ் தில்லைச் சிற்றம்பலம் மேய
செல்வன் கழ லேத்தும் செல்வம் செல்வமே.

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா ; சுடர் விட் டுளன் எங்கள் சோதி
மாதுக்கம் நீங்கலுறுவீர் ! மனம் பற்றி வாழ்மின்,
சாதுக்கள் மிக்கீர் ! இறையே வந்து சார் மின்களே.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் ;
வீழ்க தண்புனல் ; வேந்தனும் ஓங்குக ;
ஆழ்க தீய தெல்லாம் ; அரன் நாமமே
சூழ்க ; வையக மும் துயர் தீர்கவே.

—சம்பந்தர்

## தாலேலோ

மாணிக்கங் கட்டி வயிரம் இடை கட்டி
ஆணிப் பொன் னுற்செய் வண்ணச் சிறு தொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே ! தாலேலோ.
வையம் அளந்தானே ! தாலேலோ.

உடையார் கண்மணியோ(டு) ஒண்மா துளம் பூ
இடை விரவிக் கோத்த எழில் தொழ்கி னேடு
விடை ஏறு காபாலி ஈசன் விடுதந்தான்
உடையாய் ! அழேல், அழேல் ; தாலேலோ ;
உலகம் அளந்தானே ! தாலேலோ.

ஓதக் கடலின் ஒளிமுத்தின் ஆரமும்
சாதிப் பவளமும் சந்தச் சரிவளையும்
மாதக்க என்று வருணன் விடுதந்தான்
சோதிச் சுடர் முடியாய் ! தாலேலோ
சுந்தரத் தோளனே ! தாலேலோ.

## இளமா மதீ !

தன் முகத்துச் சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்து போய்
பொன் முகக் கிண்கிணி ஆர்ப்பப் புழுதி அளைகின்றுன்
என் மகன் கோவிந்தன் கூத்தினை இள மா மதீ !
நின்முகம் கண்ணுள வாகில் நீ இங்கே நோக்கிப் போ.

என்சிறு குட்டன் எனக்கோர் இன்னமுது எம் பிரான்
தன்சிறு கைகளால் காட்டிக் காட்டி அழைக் கின்றுன்
அஞ்சன வண்ணனே(டு) ஆடல் ஆட உறுதியேல்
மஞ்சில் மறையாதே மாம தீ ! மகிழ்ந்தோடி வா.

—பெரியாழ்வார்

# 2. வருணனை

## வெண்ணிலா

மீன்கள் கோடி கோடி சூழ
வெண்ணிலாவே—ஒரு
வெள்ளி ஓடம் போல வரும்
வெண்ணிலாவே.

ஆம்பல் களி கூரவரும்
வெண்ணிலாவே—உனக்கு
அம்புயம் செய் தீங்கெதுவோ
வெண்ணிலாவே.

வளர்ந்து வளர்ந்து வந்த
வெண்ணிலாவே—மீண்டும்
வாடி வாடிப் போவதேனோ
வெண்ணிலாவே.

ஆழியும் நீ வரக்கண்டு
வெண்ணிலாவே—குதித்து
ஆடுவதெக் காரணமோ
வெண்ணிலாவே.

பறக்கச் சிறகிருந்தால்
வெண்ணிலாவே—உன்றன்
பக்கம் வந்து சேருவனே
வெண்ணிலாவே.

பால் போல் நிலவெறிக்கும்
வெண்ணிலாவே—என்றன்
பாங்கில் விளை யாட வாராய்
வெண்ணிலாவே.

பாங்கில் விளை யாட வந்தால்
வெண்ணிலாவே—நல்ல
பால் தருவேன் பழந்தருவேன்
வெண்ணிலாவே.

—சி. தேசிக விநாயகம் பிள்ளை

## மயில்

அழகிய மயிலே ! அழகிய மயிலே !
அஞ்சுகம் கொஞ்ச அமுத கீதம்,
கருங்குயில் இருந்து விருந்து செய்யக்,
கடிமலர் வண்டுகள் நெடிது பாடத்,
தென்றல் உலவச், சிலிர்க்கும் சோலையில்
அடிஎடுத் தூன்றி அங்கம் புளகித்(து)
ஆடுகின்றாய் அழகிய மயிலே !
உனது தோகை புனையாச் சித்திரம்
ஒளிசேர் நவமணிக் களஞ்சியம் அதுவாம் ;
உள்ளக் களிப்பின் ஒளியின் கற்றை
உச்சியில் கொண்டையாய் உயர்ந்ததோ என்னவோ.
ஆடு கின்றாய் ; அலகின் நுனியிலே
வைத்த உன் பார்வை மறுபுறம் சிமிழ்ப்பாய் ;
சாயல் உன் தனிக்கொத்து ; சபாஷ் கரகோஷம்
ஆயிரம் ஆயிரம் அம்பொற் காசுகள்
ஆயிரம் ஆயிரம் அம்பிறை நிலவுகள்
மரகத உருக்கின் வண்ணத் தடாகம்
ஆன, உன் மெல்லுடல் ; ஆடல் உன் உயிர் ;
இவைகள் என்னை எடுத்துப் போயின——
மாலைப் போதில் சோலையின் பக்கம்
சென்றேன். குளிர்ந்த தென்றல் வந்தது ;
வந்த தென்றலில் வாசம் கமழ்ந்தது ;
வாசம் வந்த வசத்தில் திரும்பினேன்.
சோலை நடுவில் சொக்குப் பச்சைப்
பட்டுடை பூண்டு படர்ந்து கிடந்து
குலுக்கென்று சிரித்த முல்லை
மலர்க்கொடி கண்டேன் ; மகிழ்ச்சிகொண் டேனே.

—பாரதி தாசன்

## மணிப் பையல்

தொல்லை யிழைத்திடும் பையல்—மிகத்
துஷ்டத்தனஞ் செய்யும் பையல் ;
சொல்லினைக் கேளாத பையல்—மிகச்
சுட்டித்தனஞ் செய்யும் பையல் ;
பல்லினைக் காட்டிடும் பையல்—மிகப்
பாசாங்கு செய்திடும் பையல் ;
அல்லும் பகலுமிங் கென்றும்—ஓயா
ஆட்டங்கள் காட்டிடும் பையல்.

கல்லையும் மண்ணையும் நாடி—என்றும்
கருத்துடன் தின்றிடும் பையல் ;
நல்லதுந் தீயதும் ஒன்றாய்—என்றும்
நாட்டத்தில் கொண்டிடும் பையல் ;
வெல்லற் கரியதோர் பையல்—பொய்
வேஷங்கள் போட்டிடும் பையல் ;
செல்வச் சிறுமணிப் பையல்—பெருந்
தெய்வங்கள் வாழ்த்திடும் பையல்.

விளக்கைப் பிடித்திடும் பையல்—அது
வேண்டுமென் றுடிடும் பையல் ;
களக்கமில் உள்ளத்துப் பையல்—எங்கள்
கண்ணினுள் வாழ்ந்திடும் பையல் ;
சழக்குகள் செய்திடும் பையல்—என்றும்
சண்டைகள் போட்டிடும் பையல் ;
அளக்கருந் தொல்லை செய் பையல்—எங்கள்
ஆர்வ மிகும் மணிப் பையல்.

—பரலி. சு. நெல்லையப்பர்.

## கவிதைப் பெண்

கவிதை எனுமோர் பெண் தெய்வம்—அவள்
கவிஞர் பரவும் அருந் தெய்வம் ;
புவியை இயக்கும் புகழ்த் தெய்வம்—அவள்
புலவர் தமக்குக் குல தெய்வம்.

பூவில் நின்று சிரித்திடுவாள்—அவள்
பூங்கொடி தன்னில் ஆடிடுவாள் ;
காவில் வீசும் காற்றினிலே—இன்பக்
கண்ணிகள் பாடி உலவிடுவாள் ;

தாமரைப் பூவில் வீற்றிருப்பாள்—வானத்
தாரகை தன்னுள் மினுமினுப்பாள் ;
சாமமை யிருளிற் காட்டினிலே—ஒரு
சண்பகப் பூவிற் கமழ்ந்திடுவாள் ;

நீலமா மயிலின் தோகையிலே—எழில்
நெய்திடு பட்டுப் பூச்சியிலே
மாலையின் செவ்விய வானகத்தே—நின்று
மந்திரிப் பாளவள் அந்தரத்தே ;

ஆடிடு வாள்கடல் அலைகளிலே—எழுந்து
ஆர்த்திடுவாள் புயல் காற்றினிலே ;
ஓடிடுவாள் நதி ஓட்டத்திலே—அவள்
உதித்திடு வாள்கதிர் வட்டத்திலே. —சோமு

## சூரியோதயம்

காமரு தேர்வெய்யோன் எங்கும் கரம்பரப்பி
தேமரு சோலை மலர்திறக்கும் ;—தாமரையின்
தொக்க இதழ் விரித்துப் பார்க்கும் தொலைந்திருள்போய்
புக்க புரைகிளைப்பான் போல். —தண்டி

## சூரியாத்தமனம்

புறந்தந் திருள்இரியப் பொன்நேமி உய்த்துச்
சிறந்த ஒளிவளர்க்கும் தேரோன்—மறைந்தான் ;
புறவாழி சூழ்ந்த புவனத்தே தோன்றி
இறவாது வாழ்கின்றுர் யார் ? —தண்டி

# 3. தனிப்பாடல்

*திருக்கோவலூரில் அங்கவை சங்கவை என்ற பெண்கள் ஔவைக்கு இலைக்கறியிட்ட போது பாடியது.*

வெய்தாய் நறுவிதாய் வேண்டளவும் தின்பதாய்
நெய்தான் அளாவி நிறம்பசந்து—பொய்யாய்
அடகென்று சொல்லி அமுதத்தை இட்டாள்
கடகம் செறியாதோ கைக்கு.

*சோழன் ஒரு துகிலைப் பார்த்துப் பராக்காயிருப்ப அப்போது ஔவை பாடியது.*

நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினும் நூற்சேலை
நாற்றிங்கள் தன்னில் நைந்துபோம்—மாற்றலரைப்
பொன்றப் புறங்கண்ட போர்வேல் அகளங்கா
என்றும் கிழியா(து)என் பாட்டு.

*பாண்டியன் 'நீர் கல்ல புலவர்' என்றபோது பொய்யாமொழியார் பாடியது.*

அறம் உரைத் தானும் புலவன் ; முப் பாலின்
திறம் உரைத் தானும் புலவன்—குறுமுனி
தானும் புலவன் தரணி பொறுக்குமோ
யானுஞ் புலவன் எனின்.

## சிவப்பிரகாசத் திருவன்

ஒருகையிலே அன்னம் ; ஒரு கையிலே சொன்னம்
வருகையிலே சம்மான வார்த்தை—பெருகுபுகழ்ச்
சீமானும் எங்கள் சிவம்பிரகா சத் திருவக்
கோமானுக் குற்ற குணம்.

## குன்றை எல்லன்

ஆலெங்கே அங்கே அரும்பறவை ; ஆல்துயிலும்
மாலெங்கே அங்கே மலர் மடந்தை—சோலைதொறும்
செங்கே தகை மணக்கும் செங்குன்றை எல்லன் எங்கே
அங்கே இரவலரெல் லாம்.

### ஆனூர்ச் சர்க்கரை

செங்குன்றை எல்லாநின் செங்கைக் கொடைஅதனுக்(கு)
எங்கெங்குந் தேடி இணைகாணேன்—கொங்கதனில்
சர்க்கரையைப் பாடலாம் ; தண்டமிழ்க்கொன் றீயாத
எக்கரையாம் பாடோம் இனி.

### கச்சியப்பன்

மண்படுமோ ? வெய்யிலிலே வாடுமோ ? புல்லர் இரு
கண்படுமோ ? எப்போதும் கற்றவர்க்குப்—பண்புடனே
மெச்சிஅப் பாலுங் கொடுக்கும் விறுவல்லைக் காளத்திக்
கச்சிஅப் பனை உதைத்த கால்.

### புலமைப் பொலிவு

வாக்கிற்(கு) அருணகிரி ; வாதவூ ரார்கனவில்
தாக்கில் திருஞான சம்பந்தர் ;—நோக்கிற்கு
நக்கீர தேவர் ; நயத்துக்குச் சுந்தரனுர் ;
சொற்குறுதிக்(கு) அப்பர்எனச் சொல்.

### கச்சி

மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா ; கச்சி
கடல் படுவ எல்லாம் படும்.

### திருக்கோவலூர்

பொன் மாரி பெய்யுமூர் ; பூம் பருத்தி ஆடையாய்
அந்நாள் வயல்அரிசி ஆகும்ஊர்—எந்நாளும்
தேங்குபுக ழேபெருகும் சேதிமா நாடதனில்
ஓங்குந் திருக்கோவல் ஊர்.

# 4. கதைப்பகுதி

## 1. காந்திமகான் கதை

### உப்பு சத்தியாக்கிரகம்

*வைசிராய்க்குக் கடிதம்*

‘ ஐயா ஆங்கில சர்க்காரே !
அடியேன் விண்ணப்பம் கேட்டிடுவீர் ;
அந்தநாள் விக்கவே வந்தவர் நீர் ;
அடிமைக ளாகவே ஆக்கிப்பிட்டீர்.
நீங்கள் புகுந்த தினமுதலாய்,
நேருக்குச் சாப்பாடு போரவில்லே ;
வந்துபுகுந்திட்ட நேரபலன்,
வகுத்துச் சோத்துக்கும் பத்தவில்லே ;
எழுதப் படிக்கத் தெரியவில்லே ;
என்ன படிச்சும் புரியவில்லே ;
இப்படி யாகவே ஆண்டுப் பிட்டீர்
எங்கள் தவறுதல் என்னசெய்வீர்
பத்துப் பதினேரு சீர்திருத்தம்
பாங்காகச் செய்து தந்துவிட்டால்
சட்டமறுப்பு இப்போ செய்வதில்லே
சத்தியம் ’ என்றெரு காயிதத்தில்
காந்தி மகராசன் எழுதிவிட்டார்
கைநாட்டும் அதிலே போட்டுவிட்டார்.

*வைசிராயும்,*

‘ தம்பி ! பொறுபொறு தந்துடுரோம் ;
தகுந்த சமயம் வந்துடட்டும் ’,
என்றெரு காயிதம் தான் எழுதி,
எதிர்ப்புக்குத் தயார் செய்துவிட்டார்.

இந்த நிலேமையிலே காந்தி மகான்
இந்திய மக்களேக் கூட்டிவைத்தே,

*சத்தியாக்கிரகிகளுக்கு உபதேசம்*

'ஆண்டு பழகிய கூட்டமது,
அடக்கி ஆளும் பெரும்பிரிட்டன் ;
அவனோடே சண்டை தொடங்கிருக்கோம்,
ஆயுதமின்றித் தொடங்கிருக்கோம் ;
சகலதேசமும் பார்த்திருக்க
சத்தியப் போரைத் தொடங்கிருக்கோம்,
உலகமெல்லாம் பார்த்திருக்க
உத்தமப் போரைத் தொடங்கிருக்கோம் ;
அடிஉதைபட்டு விழுந்தாலும்
ஆத்திரங் கொண்டிடக் கூடாது ;
கொல்லுக் கொலைவந்து சேர்ந்தாலும்
கோபம் கொண்டிடக் கூடாது ;
கோழைகளாகவே வாழாதீர்.
கொல்லுக் கொலைகளும் செய்யாதீர்.
ஏழைகளாகவே வாழ்ந்தாலும்
ஏந்திக் குடிச்சுப் பிழைக்காதீர்.
வாழுவதாகவே தானிருந்தால்
மானத்தோடேயே வாழவேணும்.
ஆனந்தமாகப் பிறந்தது போய்
அடிமைகளாகியே வாழுவதோ ?'
என்னையன் காந்தியும் சொன்னதுமே,
இந்தியச் சீமையும் முன்னேவந்து,

*உப்பு*

'முப்பக்கம் கடலிருக்கும் உப்பு வயல் உண்டு
முழங்காலு ஆழத்திலே முடிச்சுப்பு உண்டு ;
எங்கள் கடல் எங்களது ஏழைகளுக் குப்பு
பொங்கு கடல் எங்களது போசனத்துக் குப்பு ;
மானம் மழை தான் பொழிய வைத்ததொரு தண்ணீர்
வாரி உப்புக் குண்டு வரி வாயிதாவும் என்றால்,
காத்துக்குமே வரி விதிப்பார் ; காசு பணம் கேட்பார்
காலையிலே உதிச்சு வரும் கடவுளுக்குங் கேட்பார் ;
உப்புச் சட்டம் என்பதொரு துப்புக் கெட்ட சட்டம்
உடச்செறியப் போவதென்றே ஒதுக்கிவிட்டோம் திட்டம்'

*தண்டி யாத்திரை* 11—3—30

'கையில் தடி எடுத்துக்
கச்சை இறுக்கிக் கட்டி,
காந்திக் கிழவர் நடை போடுறர் போடுறர் போடுறர்.

பையன் சிறுவருமே
பாட்டன் நடையைக் கண்டு,
பதறிப் பதறிக் கூட - ஓடுறர் ஓடுறர் ஓடுறர்.

கஞ்சிக்கும் கூழுக்குமே
பஞ்சப் பட்டே தெரிச்சு
கெஞ்சிக் குடிச்சிக்கிட்டு சாகுறேம் சாகுறேம் சாகுறேம்.

வஞ்சிக்கும் அந்நியனே
நெஞ்சில் இரக்கம் இன்றி,
வாரிக் கொண்டே நித்தம் ஏகுறன் ஏகுறன் ஏகுறன்.

சாகத் துணிந்து விட்டோம்
சமுத்திர தீரந் தன்னில்
தண்டியில் உப்பு வாரப் போகிறேம் போகிறேம் போகிறேம்.

என்றே சொல்லிப் போகுது ஐயா
இந்த நாட்டுச் சேனை;
எல்லா நாடும் பார்க்குது ஐயா
இந்தியாவைத் தானே.
சத்தியப் போரைப் பார்த்துச் சீமை
சனமும் திகைக்குதாம்;
சாத்து மீகமே கனலாய் அனலாய்
காந்தித் தகிக்குதாம்.
ராமா ராமா ராமா என்றே
உப்பை எடுத்தா ராம்
ராசாங்கத்துச் சட்டம் மீறி
உப்பை எடுத்தா ராம்.
வந்தே மாதரம் வந்தே மாதரம்
வந்தே மாதரமே
வந்தே மாதரம் என்று வணங்கி
வாரினராம் உப்பை
ஜெயம் ஜெயம் ஜெய ஜய ஜய காந்திக்கீ ஜே

—கொத்தமங்கலம் 'சுப்பு'

## 2. புத்தரும் ஏழைச் சிறுவனும்

[அரண்மனையிலிருந்து வெளிப்பட்டுச் சென்ற புத்தர் வழி நடந்த களைப்பால் சோர்ந்துகிடந்தார். அவரைக் கண்ட ஓர் இடைச் சிறுவன், தான் தாழ்ந்த குலத்தினனுதல்பற்றி, தன் கலயத்தில் பால் கறந்து அவருக்குக் கொடுக்கத் தயங்கினன். அப்பொழுது பிறப்பினுல் உயர்வு தாழ்வுகள் பாராட்டலாகாது என்று புத்தர் அவனுக்குப் போதித்த வரலாறு இதனுள் கூறப்படுகிறது.]

புண்ணிய மூர்த்தி புத்தமா முனிவன்
உண்மையை உணர்ந்திவ் வுலகினி லென்றும்
அழியா இன்பம் அடையும் அவாவினுல்,
மன்னர் வாழ்வையும் மறுத்தவ னுகித்
தந்தையை மறந்து தனயனைத் துறந்து
மங்கை யசோதை மதிமுகம் நீத்து
நள்ளிர வதனில் நன்னகர் நீங்கி
உண்ணு முணவும் உறக்கமு மின்றி
இரவும் பகலும் இடை விடா தெங்கும்
நடந்து மெலிந்து நலிவுற்(று,) ஒருநாள்
வேனில் வெயிலில் வெந்தெரி கானலில்
கைகால் தளர்ந்து கண்களும் மூடி
மூச்சும் அடங்கி முகமும் வெளிறி
உயிரும் உடம்பில் ஊச லாட
விஞ்சிய மயக்கால் வீழ்ந்து கிடந்தனன்.

*வேறு*

ஆடுகள் மேய்த்து வரும்—ஒருவன்
ஆயர் குலச் சிறுவன்,
வாடிக் கிடந்தவனைச்—செல்லும்
வழியின் மீது கண்டான்.

வையகம் வாழ்ந்திடவே—பிறந்த
மாதவச் செல்வன்முகம்
வெய்யிலில் வெந்திடாமல்—தழைகள்
வெட்டி யருகில் நட்டான்.

தெய்வகுலத் திவனை—எளியேன்
　　தீண்டலும் ஆகாதினிச்
செய்வதும் யாதெனவே—சிறிது
　　சிந்தை தயங்கி நின்ருன்.

உள்ளந் தெளிந்துடனே—வெள்ளா(டு)
　　ஒன்றை யழைத்து வந்து,
வள்ளல் மயக்கொழிய—மடுவை
　　வாயில் கறந்து விட்டான்.

நட்ட தழைகளெல்லாம்—வளர்ந்து
　　நாற்புற மும் கவிந்து,
கட்டிய மாளிகை போல்—வனத்தில்
　　காட்சி யளித்த அம்மா.

ஐயனை இவ்வுலகம்—காணுதற்
　　கரிய வோர் தெய்வ மெனக்,
கைகள் தொழுது நின்ருன்—சிறுவன்
　　களங்க மிலா வுளத்தான்.

நிலத்திற் கிடந்த ஐயன்—மெல்ல
　　நிமிர்ந்து தலை தூக்கிக்
'கலத்தினி லே கொஞ்சம்—பாலைக்
　　கறந்து தருவாய்' என்ருன்.

'ஐயை யோ! ஆகா' தென்ருன்—சிறுவன்
　　'அண்ணலே! யானும் உனைக்
கையினல் தீண்ட வொண்ணு—இடையன் ஓர்
　　காட்டு மனிதன்' என்ருன்.

*அதற்குப் புத்தர்,*

'இடர் வரும் போதும்—உள்ளம்
　　இரங்கிடும் போதும்
உடன் பிறந் தவர் போல்—மாந்தர்
　　உறவு கொள்வரப்பா.

'ஓடும் உதிரத்தில்—வடிந்து
　　ஒழுகும் கண்ணீரில்
தேடிப் பார்த்தாலும்—சாதி
　　தெரிவதுண் டோ அப்பா.

‘ எவர் உடம் பினிலும்—சிவப்பே
இரத்த நிற மப்பா
எவர் விழி நீர்க்கும்—உவர்ப்பே
இயற்கைக் குணமப்பா.

‘ பிறப்பினு லெவர்க்கும்—உலகில்
பெருமை வாரா தப்பா
சிறப்பு வேண்டு மெனில்—நல்ல
செய்கை வேண்டு மப்பா.

‘ நன்மை செய்பவரே—உலகம்
நாடும் மேற்குலத்தார்
தின்மை செய்பவரே—அண்டித்
தீண்ட வொண்ணுதார் ’

நிலத்துயர் ஞானி—இவை
நிகழ்த்தி ‘ என் தம்பீ !
கலத்தினி லேகொஞ்சம்—பாலைக்
கறந்து தா ’ என்றான்.

ஆயர் சிறுவனும்—கலத்தில்
அளிக்க வாங்கியுண்டு
தாயிலும் இனியன்—கொண்ட
தளர்ச்சி நீங்கினனே.

—சி. தேசிக விநாயகம் பிள்ளை.

## 3. *பிருதிவிராஜ் சம்யுக்தை*

மங்கை சுயம்வர நாளிது ;
வந்தனர் மன்னர்பல் லாயிரம் ;
அங்கையில் மாலையை ஏந்தியே
அவையிற்சம் யுக்தையும் போந்தனள்.

ஆரங் கரங்கொண்ட ஆரம்போல்
அசைந்து நடக்கிருள் கூட்டத்தில் ;
ஆரங்கு அவள்முகம் நோக்கிடார் ?
ஆர்முக மும்அவள் நோக்கிலள்.

பிருதிவி ராஜனுக் கோலைதான்
போக்க மறுத்ததோ(டு) ஆங்(கு,) அவன்

உருவச் சிலையொன்று செய்தனன்
    ஒள்ளணி வாயிலைக் காக்கவே.
சேவகன் போலவே வைத்தனன்
    தெளிவில் ஜயசந்த்ர ராஜனே ;
பூவைதன் காதலற்(கு) அத்தனும்
    புன்மை புரிந்ததைக் கண்டனள்.
நையு முளத்தின ளாகியே
    நாடிப் பலபல வெண்ணினள் ;
பைய நடந்தவள் வாசலில்
    பதுமை இருப்பிடம் நண்ணினள்.
' நற்சிலை யாகவே வந்தநீ
    நாதன் ' எனமாலை சூடினள் ;
பொற்சிலை போன்றவள் சோகத்தால்
    பொருமியே சாய்ந்தனள் மூர்ச்சியாய்.
தரையினிற் பூவுடல் சேருமுன்
    தாங்கின காதலன் கைகளே !
மறைவினில் நின்றவன் பிருதிவி
    மங்கையை ஏந்தியே பாய்ந்தனன்.
ஒருத்தர் துணையின்றிச் சிங்கம்போல்
    ஓங்கிய காதலால் வந்தவன்
கருத்தை உணர்ந்திடும் புரவிதான்
    காற்றினைப் போலப் பறக்குமால்.
கொம்பனை யாளையோர் கையினில்
    கூரிய வாளொரு கையினில்
நம்பிக் குதிரையை விட்டனன்
    நாலுகாற் பாய்ச்சலில் சென்றதே.
கூடிய மன்னர் திகைத்தனர் ;
    கூறினர் வஞ்சினம் கோபமாய் ;
ஓடிய பேர்களோ ராயிரம் ;
    உறுபரி ஊர்ந்தவ ராயிரம் ;
வாள்களோ ராயிரம் மின்னின ;
    வளைத்து முறுக்கினர் மீசையை.
வேளினைப் போன்றவன் தன்னையும்
    மின்னிடை யாளையும் கண்டதார் ?

—பெ. தூரன்.

## 4. பூனையும் முயலும்

' பாவிகள் மோனர் போலும்
பலவிர தியர்கள் போலும்
ஒவறு சகாயர் போலும்
உறமுறைச் சுற்றம் போலும்
மேவுவர் ; அவரைச் சேரின்
மேன்மைய ரேனும் உய்யார் ;
பூவையும் முயலும் முன்னேர்
பூனையைச் சேர்ந்த வாறே '
என்ன, அக் கதையே தென்றே,
இனப்பற வைகள்வி னவ,
' முன்னமோர் மரத்தின் மேலே
முயங்கிநான் இருக்கும் போது
தன்னிக ரின்றி வாழும்
தனிமுயல் ஒன்று வந்தே
உன்னுமோர் பொந்திற் சேர்ந்தங்(கு)
உட்புகுந் திருந்த தன்றே.
பூவையொன் றங்கு வந்திப்
பொந்துநான் இருக்கும் வீடு ;
நீவரு வானேன் ? ' என்ன,
' நிழலொடு தருக்கள் சாலை
வாவிநற் கூபம் செல்லும்
வழியினில் தண்ணீர்ப் பந்தல்
சாவடி இவைக ளெல்லாம்
சகலர்க்கும் பொதுவே ' என்ன,
அங்கவை இரண்டும் சண்டை
ஆகிப்பின் மத்தி யஸ்தர்
தங்களைக் கேட்போம் என்று
தனிமுயல் அழைத்துப் போக,
' இங்குநாம் வழக்கா வந்தோம்
இருதலை வழக்கும் தீர்க்கும்
துங்கர்ஆர் ? ' என்று பூவை
சொல்லவே, முயலும் சொல்லும் ;

' கருதிய யமுனை யாற்றங்
கரையிலே தவத்தைப் பண்ணும்
பொருவில்கூர்ம் பல்லன் என்னும்
பூனையார் சொல்வார் ' என்ன,
' வெருவியே பூனை பக்கல்
மேவிநாம் செல்வ தெவ்வா(று)
உரை ' யெனத், ' தூர நின்றே
உரைப்பம் ' என் றழைத்துப் போக,

இருவரும் போனார் ; அந்த
இருடியார் தவத்தைக் கண்டார் ;
' பெரியவர் இவர்தாம் நம்மைப்
பிடிப்பதும் செய்யார் ' என்று
கருதினர் ; பணிந்தெ ழுந்தார்
கைகளும் கட்டி நின்று
பரவினார் ; யோகம் நீங்கிப்
பார்த்தனர் பூனையாரும்.

' ஆரெவர் ? நீங்கள் நம்மை
அறிந்தனிர் இங்கு வந்த
காரியம் சொல்லும் ! ' என்று
கபடனார் உரைக்கத், தங்கள்
போராடு வழக்கும் சொல்லப் '
' பெருகிய மூப்பி னாலே
நீருரைப் பதுகே ளாது
நெருங்கிவந் துரைக்க ' என்ன,

சற்றிடம் கிட்டி வந்து
சாற்ற, ' இம் மாற்றம் காதில்
உற்றது போலும் பாதி
உறாதது போலும் கேட்டோம் ;
மற்றினிப் பட்ச பாத
வழக்குநாம் உரைப்ப தில்லை ;
குற்றமிங்(கு) ஒருவர் மீதில்
கூறிடில் கோப மாமே.

‘ தருமமே விரும்பு வாரைத்
 தருமமே விரும்பிக் காக்கும் ;
தருமமே இகழு வாரைத்
 தருமமே இகழ்ந்து நிற்கும் ;
தருமமே மெய்யாய் நின்று
 சகலமும் செய்த லாலே,
தருமமே சொல்வ தல்லால்
 சற்றுநாம் பொய்சொல் லோமே.

‘ எண்ணிய விரதம் எல்லாம்
 இயற்றினம் ; இவைக்கும் மேலாம்,
புண்ணிய விரதம் என்றும்
 பொய்சொல்லா விரதம் ஒன்றும்,
நண்ணிய உயிரைக் கொல்லா
 நலந்தரும் விரதம் ஒன்றும்,
மண்ணினில் அனுட்டிப் போம்; நாம்
 வழக்கிலோ ரம்சொல் லோமே.

கிட்டநீர் வந்து சொன்னல்
 கேட்கும்நம் காது ; நம்மை
விட்டுநீர் தூர நின்று
 விளம்பினல் கேளா ’ தென்று
துட்டனர் மாரீ சத்தால்
 துலங்குகூர்ம் பல்லன் என்னும்
இட்டமார்ச் சாலன் சொல்ல ;
 இவைதம(து) உளத்தில் எண்ணி,

மெய்கள்போல் சொன்ன எல்லாம்
 விசுவசித் திரண்டும் செல்லக்,
கைகளாற்பிடித்துக் கண்டம்
 கடித்திரத் தங்கு டித்தே
செய்கப டான பூனை
 செருக்கியங் கிருக்கச் ; சேர்ந்த
மொய்சிறைப் பூவை யோடே
 முயலுமங் கிறந்த அன்றே.

—வீர மார்த்தாண்டத் தேவர்

# 5. அறநெறி

## நன்னெறி

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொல் இனி(து) ; ஏனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க—ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ ? நன்னுதால் ! ஒண்கரும்பு
வில்லோன் மலரோ விருப்பு ?

உள்ளம் கவர்ந்தெழுந்து ஓங்குசினம் காத்துக்
கொள்ளும் குணமே குணம் என்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ ? தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ ? விளம்பு.

ஆக்கும் அறிவான் அலது பிறப்பினல்
மீக்கொள் உயர்(வு)இழிவு வேண்டற்க—நீக்கு
பவரார் அரவின் பருமணிகண்(டு) ? என்றும்
கவரார் கடலின் கடு.

—சிவப்பிரகாசர்

## ஆசாரக்கோவை

வைகறை யாமம் துயில்எழுந்து, தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து, வாய்வதின்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை.

நின்றக்கால் நிற்க அடக்கத்தால் ; என்றும்
இருந்தக்கால் ஏவாமை ஏகார்—பெருந்தக்கார்
சொல்லின் செவிகொடுத்துக் கேட்டீக ; மீட்டும்
வினவற்க சொல்ஒழிந்தக் கால்.

விரைந்துரையார், மேன்மேல் உரையார், பொய்ஆய
பரந்துரையார், பாரித் துரையார்—ஒருங்கெனைத்தும்
சில்லெழுத்தினலே பொருள் அடங்கக் காலத்தால்
சொல்லுக செவ்வி அறிந்து.

—பெருவாயில் முள்ளி

## அறநெறிச் சாரம்

இன்சொல் விளைநிலமா, ஈதலே வித்தாகி,
வன்சொல் களைகட்டு, வாய்மை எருஅட்டி,
அன்புநீர் பாய்ச்சி, அறக்கதிர் ஈன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்.

எப்பிறப் பாயினும் ஏமாப்(பு) ஒருவற்கு
மக்கட் பிறப்பின் பிறிதில்லை ;—அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண்
நிற்றலும் கூடப் பெறின்.

பலகற்றேம் யாம்என்று தற்புகழ வேண்டா ;
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்.
சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்(கு)
அச்சாணி அன்னதோர் சொல்.

பரிந்தெனக்கோர் நன்மை பயப்பாய்போல், நெஞ்சே !
அரிந்தென்னை ஆற்றவும் தின்னல்—புரிந்து நீ
வேண்டுவ வேண்டுவேன் அல்லேன் ; விழுக்குணம்
பூண்டேன் ; பொறிஇலி ! போ.

இருளே உலகத் தியற்கை ; இருளகற்றும்
கைவிளக்கே கற்ற அறிவுடைமை ; கைவிளக்கின்
நெய்யேதன் நெஞ்சத்(து) அருளுடைமை ; நெய்பயந்த
பால்போல் ஒழுக்கத் தவரே பரிவில்லா
மேல்உலகம் எய்து பவர்.

நல்லறம் எந்தை ; நிறை எம்மை ; நன்குணரும்
கல்வி என்தோழன் ; துணி(வு)எம்பி ;—அல்லாத
பொய்ச்சுற்றத்தாரும் பொருளோ ? பொருளாய
இச்சுற்றத் தாரில் எனக்கு.

—முனைப்பாடியார்

### நான்மணிக்கடிகை

கள்ளி வயிற்றின் அகில் பிறக்கும் ; மான் வயிற்றின்
ஒள்ளரி தரம் பிறக்கும் ; பெருங் கடலுள்
பல் விலைய முத்தம் பிறக்கும் ; அறிவார் யார்
நல்லாள் பிறக்கும் குடி.

மொய் சிதைக்கும் ஒற்றுமை இன்மை ; ஒருவனைப்
பொய் சிதைக்கும் பொன் போலும் மேனியை ; - பெய்த
கலஞ் சிதைக்கும் பாலின் சுவையை ; குலஞ் சிதைக்கும்
கூடார் கண் கூடி விடின்.

நாற்றம் உரைக்கும் மலருண்மை ; கூறிய
மாற்றம் உரைக்கும் வினைநலம் ; தூக்கின்
சகம் பொதிந்த தீமை மனம் உரைக்கும் ; முன்னம்
முகம் போல முன்னுரைப் பதில்.

மகனுரைக்கும் தந்தை நலத்தை ; ஒருவன்
முகனுரைக்கும் உள்நின்ற வேட்கை ; - அகனீர்ப்
புலத்தியல்பு புக்கான் உரைக்கும் ; நிலத்தியல்பு
வானம் உரைத்து விடும்.

சொல்லான் அறிப ஒருவனை ; மெல்லென்ற
நீரான் அறிப மடுவினை ; யார்கண்ணும்
ஒப்புரவி னன்அறிப சான்றுண்மை ; மெய்க்கண்
மகிழான் அறிப நறு.

இரும்பின் இரும்பிடை போழ்ப ; பெருஞ்சிறப்பின்
நீருண்டாத் நீரால்வாய் பூசுப ;—தேரின்
அரிய அரியவற்றல் கொள்ப ; பெரிய
பெரியரான் எய்தப் படும்.

—விளம்பிநாகனார்

## ஆசாரக்கள்ளர்

செழுங்கள்ளி நிறை சோலைத் தண்டலை நீர் நெறியாரே ! திருடிக் கொண்டே
எழுங் கள்ளர் நல்ல கள்ளர் ; பொல்லாத கள்ளர் இனி யாரோ என்றால்,
கொழுங் கள்ளர், தம்முடன் கும்பிடுங் கள்ளர், திருநீறு குழைக்கும் கள்ளர்,
அழுங் கள்ளர், தொழுங் கள்ளர், ஆசாரக் கள்ளர் இவர் ஐவர் தாமே.

—தண்டலையார் சதகம்

## அனுபவ ஞானம்

தண்டாமல் ஈவது தாளாண்மை ; தண்டி
அடுத்தக் கால் ஈவது வண்மை ; அடுத்தடுத்து
பின் சென்றால் ஈவது காற்கூலி ; பின் சென்றும்
பொய்த்தான் இவன் என்று போமேல் அவன் குடி
எச்சம் இறுமேல் இறு.

ஒன்றாகக் காண்பதே காட்சி ; புலனைந்தும்
வென்றான் தன் வீரமே வீரமாம் ; ஒன்றானும்
சாகாமற் கற்பதே கல்வி ; தனைப்பிறர்
ஏவாமல் உண்பதே ஊண்.

வெண்பா இருகாலிற் கல்லானை, வெள்ளோலை
கண்பார்க்கக் கையால் எழுதானைப் - பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் ; பிறர் நகைக்கப் பெற்றாளே
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

மதியாதார் முற்றம் மதித் தொருகால் சென்று
மதியாமை கோடி உறும்.
உண்ணீர் உண்ணீர் என்றே ஊட்டாதார் தம்மனையில்
உண்ணாமை கோடி உறும்.
கோடி கொடுத்தும் குடிப் பிறந்தார் தம்மோடு
கூடுவதே கோடி உறும்.
கோடானு கோடி கொடுப்பினும் தன்னுடை நா
கோடாமை கோடி எறும்.

—ஔவையார்





# 1. வாழ்த்து

## பகைவனுக் கருள்வாய்

பகைவனுக் கருள்வாய்—நன்னெஞ்சே !
பகைவனுக் கருள்வாய்.

புகை நடுவினிலே தீயிருப்பதைப்
பூமியிற் கண்டோமே—நன்னெஞ்சே !
பூமியிற் கண்டோமே.

பகை நடுவினில் அன்புருவானநம்
பரமன் வாழ்கின்ருன்—நன்னெஞ்சே !
பரமன் வாழ்கின்ருன்.

சிப்பியிலே நல்லமுத்து விளைந்திடும்
செய்தி அறியாயோ—நன்னெஞ்சே !
செய்தி அறியாயோ.

குப்பையிலே மலர்கொஞ்சுங் குருக்கத்திக்
கொடி வளராதோ நன்னெஞ்சே !
கொடி வளராதோ.

வாழ்வை நினைத்தபின் தாழ்வை நினைப்பது
வாழ்வுக்கு நேராமோ ?—நன்னெஞ்சே !
வாழ்வுக்கு நேராமோ ?

தாழ்வு பிறர்க்கெண்ணத் தான்அழிவான் என்ற
சாத்திரம் கேளாயோ—நன்னெஞ்சே !
சாத்திரம் கேளாயோ.

—பாரதி

## மகா தெய்வ வாழ்த்து

தாயாகித் தந்தையுமாய்த்
தாங்குகின்ற தெய்வம் ;
தன்னைநிக ரில்லாத
தனித்தலைமைத் தெய்வம் ;
வாயார வாழ்த்துகின்றோர்
மனத் தமர்ந்த தெய்வம் ;
மலரடிஎன் சென்னிமிசை
வைத்த பெருந் தெய்வம் ;
காயாது கனியாகிக்
கலந்தினிக்கும் தெய்வம் ;
கருணை நிதித் தெய்வம் ; முற்றும்
காட்டுவிக்கும் தெய்வம் ;
சேயாக எனைவளர்க்கும்
தெய்வம் ; மகா தெய்வம் ;
திருச்சபையில் விளங்குகின்ற
தெய்வம் ; அதே தெய்வம்.

—இராமலிங்கசுவாமிகள்

## வாரீர் !

அன்புருவானவர், இன்புற உள்ள
அறிவுரு வாயினீர் ! வாரீர்
அருட்பெருஞ் சோதியீர் ! வாரீர்.

இரவும் பகலும் இதயத்தில் ஊறி
இனிக்கும் அமுதரே ! வாரீர்
இனித்தரியேன் இங்கு வாரீர்.

ஈனம் அறுத்துமெய் ஞான விளக்குஎன்
இதயத்தில் ஏற்றினீர் ! வாரீர்
உதயச்சுட ரானீர் ! வாரீர்.

உறங்கி இறங்கும் உலகவர் போலநான்
உறங்க மாட்டேன் இங்கு வாரீர்.
இறங்க மாட்டேன் இங்கு வாரீர்.

—இராமலிங்கசுவாமிகள்

## தமிழ்

கனியிடை ஏறிய சுளையும்,—முற்றல்
கழையிடை ஏறிய சாறும்,
பனிமலர் ஏறிய தேனும்,—காய்ச்சும்
பாகிடை ஏறிய சுவையும்,
நனிபசு பொழியும் பாலும்,—தென்னை
நல்கிய குளிர்இள நீரும்,
இனியன என்பேன்; எனினும்,—தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்.
செந்நெல் மாற்றிய சோறும்,—பசுநெய்
தேக்கிய கறியின் வகையும்,
தன்னிகர் தானியம் முதிரை—கட்டித்
தயிரொடு மிளகின் சாறும்,
நன்மது ரஞ்செய் கிழங்கு—கானில்
நாவில் இனித்திடும் அப்பம்
உன்னை வளர்ப்பன; தமிழா!—உயிரை
உணர்வை வளர்ப்பது தமிழே.

—பாரதிதாசன்

## தமிழன்

தமிழன் என்றொரு இனமுண்டு
தனியே அவற்கொரு குணமுண்டு
அமிழ்தம் அவனுடைய மொழியாகும்
அன்பே அவனுடை வழியாகும்.

—நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை

## கலைமகள்

இமையவர்கள் மோலி இணைமலர்த்தாள் சூட
சமயந் தொறும் நின்ற தையல்—இமய
மலை மடந்தை வாச மலர் மடந்தை எண்ணெண்
கலை மடந்தை நாவலோர் கண்.

—தண்டி

## திவ்வியப் பிரபந்தம்

வண்டினம் முரலும் சோலை மயிலினம் ஆடும் சோலை
கொண்டல்மீ தணவும் சோலை குயிலினம் கூவும் சோலை
அண்டர்கோன் அமரும் சோலை அணிதிரு வரங்கம் என்னா
மிண்டர் பாய்ந் துண்ணும் சோற்றை விலக்கிநாய்க் கிடுமின்
[நீரே.

ஊரிலேன் காணி இல்லை ; உறவுமற் றொருவர் இல்லை ;
பாரில்நின் பாத மூலம் பற்றிலேன் பரம மூர்த்தி !
காரொளி வண்ணனே ! என் கண்ணனே ! கதறுகின்றேன் ;
ஆருளர் ? களைகண் அம்மா ! அரங்கமா நகரு ளானே.

பழுதிலா ஒழுக லாற்றுப் பலசதுப் பேதி மார்கள் !
இழிகுலத் தவர்க ளேனும் எம்மடி யார்க ளாகில், [ஒக்க
தொழுமின், நீர் கொடுமின், கொண்மின், என்று நின்னோடும்
வழிபட அருளினாய் போல் மதிள்திரு வரங்கத் தானே.

—தொண்டரடிப்பொடி

## தேவாரம்

மனிதர் காள் ! இங்கே வம் ; ஒன்று சொல்லுகேன்.
கனிதந் தால்கனி உண்ணவும் வல்லிரே ?
புனிதன் பொற்கழல் ஈசன் எனும் கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே.

கங்கை ஆடில் என் ? காவிரி ஆடில் என் ?
கொங்கு தண்கும ரித்துறை ஆடில் என் ?
ஒங்கு மா கடல் ஓதநீர் ஆடில் என் ?
எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே.

மாசில் வீணையும், மாலை மதியமும்
வீசு தென்றலும், வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும், போன்றதே
ஈசன் எந்தை இணை அடி நீழலே.

—நாவுக்கரசர்

# 2. வருணனை

## மழை

வெட்டி அடிக்குது மின்னல் ;—கடல்
வீரத்திரை கொண்டு விண்ணை இடிக்குது ;
கொட்டி இடிக்குது மேகம் ;—கூ
கூ என்று விண்ணைக் குடையுது காற்று ;
சட்டச்சட சட்டச்சட டட்டா என்று
தாளங்கள் கொட்டிக் கனைக்குது வானம் ;
எட்டுத் திசையும் இடிய—மழை
எங்ஙனம் வந்த தடா, தம்பி வீரா ?
அண்டங் குலுங்குது, தம்பி !—தலை
ஆயிரந் தூக்கிய சேடனும் பேய்போல்,
மிண்டிக் குதித்திடுகின்றான் ;—திசை
வெற்புக் குதிக்குது ; வானத்துத் தேவர்
செண்டு புடைத்திடு கின்றார் ;—என்ன
தெய்விகக் காட்சியைக் கண்முன்பு கண்டோம் !
கண்டோம், கண்டோம், கண்டோம்—இந்தக்
காலத்தின் கூத்தினைக் கண் முன்பு கண்டோம் !

—பாரதி

## பாரதி பாடல்

பாட்டுக் கொருபுலவன் பாரதியடா—அவன்
பாட்டைப் பண்ணோடொருவன் பாடினானடா
கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனேயடா—அந்தக்
கிறுக்கில் உளறுமொழி பொறுப்பாயடா.
சொல்லுக்குச் சொல்லழகும் ஏறுமேயடா—கவி
துள்ளும் மறியைப் போலே துள்ளுமேயடா
கல்லும் கனிந்துகனி ஆகுமேயடா—பசுங்
கன்றும் பால் உண்டிடாது கேட்குமேயடா.
குயிலும் கிளியும் பாட்டில் கூவுமேயடா—மயில்
குதித்துக் குதித்துநடம் ஆடுமேயடா
வெயிலும் மழையும் அதில் தோன்றுமேயடா—மலர்
விரிந்து விரிந்துமணம் வீசுமேயடா.

—தேசிகவிநாயகம்பிள்ளை

## திருக்குற்ருலம்

வானை அளந்துநின்ற மலைகளுண்டு—நல்ல
வாசமொடு தென்றல்உலா வருவதுண்டு
தேனைச் சொரிந்திடும் பூஞ் சோலைகளுண்டு—வாகாய்த்
தெள்ளியநீர் துள்ளிவரும் ஓடைகளுண்டு.

தெள்ளத் தெளிந்தவண்ணச் செக்கருமுண்டு—வானில்
தேடரிய சித்திரங்கள் தீட்டலுமுண்டு
உள்ளம் தளிர்க்கவரும் முகில்களுண்டு—பன்னீர்
தெள்ளித் தெளித்துவரும் பாங்குமங்குண்டு.

நின்று குளித்திடவெள் அருவியுண்டு—வந்தோர்
நெஞ்சம் குளிருமட்டும் நிற்பதும் உண்டு
சென்று குளிப்பதற்குச் செண்பகாடவி—உயர்
தேனருவி ஐந்தருவி தொலைவி லுண்டு.

கோலக் குரங்கினங்கள் கோடியங்குண்டு—தாயின்
கும்பியிலே தொங்கிவரும் குட்டிகளுண்டு
ஆலம் விழுதினூசல் ஆடுவதுண்டு—மந்தி
அத்தனையும் அந்தரடித் தோடுவதுண்டு.

கோடுமதி சூடுபிரான் கோவிலுமுண்டு—கலைக்
கோலமிகு சிற்பஎழில் தானுமங்குண்டு
ஆடுமயில் பாடுகுயில் அனந்தமுண்டு—மன
அமைதியும் ஆனந்தமும் விளைவதுண்டு.

பன்னும் இலக்கியங்கள் பயில்வதுண்டு—பல
பண்டிதரும் அங்குவந்து கூடுவதுண்டு
கன்னித் தமிழுமுண்டு கம்பனுமுண்டே—இன்பக்
களிமிகு வாழ்விதுமோர் காவியம்அன்றோ ?

—சோமு

## கடல்

திங்கட் குழவியினைச் சேண்மணிப்பூண் தொட்டிலிட்டுப்
பொங்குதிரைக் கைமேல் பொருந்திமிக—மங்கலநல்
ஓசை செவிமடுப்ப ஊழிவரை தாலாட்டும்
ஆசைத்தாய் ஆழிஅன்றி யார் ?

—அட்டாவதானம் கிருஷ்ணையங்கார்

# 3. தனிப்பாடல்

## சத்தியப் போர்

1930-ம் வருடத்திலே காந்திஅடிகள் உப்பு சத்தியாக்கிரகத்தைத் தொடங்கி, 'தண்டி'க்குப் புறப்படப் போகிறார் என்ற போது,நாமக்கல் கவிஞர் பாடியது.

கத்தி இன்றி ரத்தம் இன்றி
யுத்தம் ஒன்று வருகுது
சத்தியத்தின் நித்தியத்தை
நம்பும் யாரும் சேருவீர்— (கத்தி இன்றி)

குதிரையில்லை யானைஇல்லை
கொல்லும் ஆசையில்லையே
எதிரி என்று யாரும்இல்லை
எற்றும் ஆசை இல்லதாய்க்— (கத்தி இன்றி)

கோபமில்லை தாபமில்லை
சாபங்கூறல் இல்லையே
பாபமான செய்கை ஒன்றும்
பண்ணும் ஆசை இன்றியே— (கத்தி இன்றி)

கண்டதில்லை கேட்டதில்லை
சண்டை இந்தமாதிரி
பண்டைசெய்த புண்ணியம்
பலித்ததே தாம் பார்த்திடக்— (கத்தி இன்றி)

## நாட்டுக் கும்மி

வீரர் குடித்தன வீரரடி நாம்
வீரருள் வீரரின் பேரரடி
சூரர் குடித்தனச் சூரரடி இப்போ
சோற்றுக்கும் தண்ணீருக்கும் சோருதடி.
வெண்ணெயும் பாலும் பெருகி வழிந்திடும்
பண்ணையம் எங்களின் பண்ணையடி
தண்ணியும் இன்றித் தயங்கத் தரித்திரம்
தங்குதடி மனம் பொங்குதடி.
பட்டும் பட்டாடையும் கட்டிக் கிழித்திட்ட
பட்டையக் காரரின் பந்தரிலே
கட்டக் கையகலக் கந்தையும் இன்றிநாம்
கத்துவ தென்னடி சித்திரமே.

—நாமக்கல் கவிஞர்

## சுதந்திரம்

தித்திக்கும் பழம் தின்னக் கொடுப்பார் ;
மதுரப் பருப்பு வழங்குவார் உனக்கு ;
பொன்னே மணியே என்றுனைப் புகல்வார் ;
ஆயினும், பச்சைக் கிளியே ! அதோபார்.
உன்னுடன் பிறந்த சின்ன அக்கா
வான வீதியில் வந்து திரிந்து,
தென்னங் கீற்றுப் பொன்னூசல் ஆடிச்,
சோலை பயின்று சாலையில் மேய்ந்து
வானும் மண்ணும் தன் வசத்திற் கொண்டாள்.
தச்சன் கூடுதான் உனக்குச் சதமோ ?
அக்கா அக்கா என்று நீ அழைத்தாய் ;
அக்கா வந்து கொடுக்கச்
சுக்கா மிளகா சுதந்திரம் கிளியே.

—பாரதிதாசன்

## பண்டாரம்

அம்மா ! ஓர் பிடியரிசி, யாருமிலாப் பாவி
  அலைந்து வந்தேன் வெகுதூரம் ; அங்கமெலாம் நொந்தேன்,
இம் மாதம் முடியுமுனே, ஈசனருளாலே
  எய்துமொரு நன்மையிங்கே ; இலையேதுந் தடையே.
தாயே ! ஓர் முழக்கீறல் தருவை, மனங் கனிந்தே ;
  தள்ளாடும் உடல்மூடித் தணித்திடுவன் பனிப்பே ;
நாயேன்பொய் மொழிவதில்லை, நாதனருளாலே
  நலமருவும், குலம்பெருகும், நலிவுறுமுன் துயரே.
மக்களைப்பெற் றெடுத்த நல்ல மகராசி ! நீயும்
  வாழ்ந்திடுவை மக்களெல்லாம் வளர்வர், சுகம்பெறுவர்
பிற்கிளைக்குப் புண்ணியமும் பெருகும், பெரியம்மா !
  பேதைவயிறுர, அன்னம்பெய்திடுவை பெரிதே !

—பண்டிதர் முத்துசாமிப் பிள்ளை

## திருமண விருந்து

வண்டமிழைத் தேர்ந்த வழுதி கலியாணத்(து)
உண்ட பெருக்கம் உரைக்கக்கேள் ; — அண்டி
நெருக்குண்டேன் தள்ளுண்டேன், நீள் பசியினலே
சுருக்குண்டேன் சோறுண் டிலேன்.

—ஔவை

## நின்றைக் காளத்தி

நீளத் திரிந்துழன்றுய் நீங்கா நிழல் போல
நாளைக் கிருப்பாயோ நல்குரவே !—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால், நீ எங்கே நான் எங்கே
இன்றைக்கே சற்றே இரு.

—தொண்டை மண்டலசதகம்

## மாந்தைத் தியாகி

மாந்தையிலே வாழும் மகுடத் தியாகி உனக்(கு)
ஏந்து தழும்போ இரண்டுண்டு—வேந்தர்
முடித்தழும்புன் காலிலே ; முத்தமிழோர்க்(கு) ஈயும்
படித்தழும்புன் கையிலே பார்.

—தனிப்பாடல்

## சோமன் கொடை

நிழலருமை வெய்யிலிலே நின்(று) அறிமின் ; ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழகுதமிழ்ச்
சொல்லருமை ஆரியத்தில் ; சோமன் கொடையருமை
புல்லரிடத் தேஅறிமின் போய். —தனிப்பாடல்

## புலமைப் பொலிவு

வெண்பாவிற் புகழேந்தி ; பரணிக்கோர்
செயங்கொண்டான் ; விருத்தம் என்னும்
ஒண்பாவிற்(கு) உயர்கம்பன் ; கோவைஉலா
அந்தாதிக்(கு) ஒட்டக் கூத்தன் ;
கண்பாய கலம்பகத்திற்(கு) இரட்டையர்கள் ;
வசைபாடக் காள மேகம் ;
பண்பாக உயர்சந்தம் படிக்கா(சு)
அலாதொருவர் பகரொணுதே. —தனிப்பாடல்

## ஆழ்வார் திருநகரி

இதுவோ திருநகரி ? ஈதோ பொருநல் ?
இதுவோ பரமபதத் தெல்லை ?—இதுவோதான்
வேதம் தமிழ்செய்து மெய்ப் பொருட்கும் உட்பொருளாய்
ஒதுஞ் சடகோபன் ஊர் ? —ஸ்ரீராமானுச முனிவர்

## விடந்தீர்த்த வெண்பா

ஆழியான் பள்ளி அணையே ! அவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே !—பூழியான்
பூணே ! புரம்எரித்த பொற்சிலையில் பூட்டுகின்ற
நாணே ! அகல நட.
மங்கை யொருபாகர் மார்பில்அணி ஆரமே !
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே !—திங்களையும்
சீறிஅதன் மேலூருந் தெய்வத் திருநாணே !
ஏறிய பண்பே இறங்கு.
பாரைச் சுமந்த படஅரவே ! பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கும் மெல்லணையே !—ஈரமதிச்
செஞ்சடையான் பூணும் திருவா பரணமே !
நஞ்சுடையாய் ! தூர நட. —கம்பர்

# 4. கதைப் பகுதி

## 1. காந்திமகான் கதை

### நவகாளி யாத்திரை

தேசங்கள் யாவும் வணங்கு மகான்,
தெய்வத்தைப் போலப் பிறந்த மகான் ;
மாசற்ற அன்பு மதத்தை இங்கே,
மறுபடி போதிக்க வந்த மகான் ;
சத்தியம் கொல்லாமை சொல்லிச் சொல்லி
சலித்துப் போன வயசி னிலே,
நித்திய கண்ட வயசி னிலே
நின்ருல் நடுங்கும் வயசி னிலே,
தள்ளாடிக் கையில் தடியூன்றித்
தலையும் நடுங்கும் பிராயத்திலே,
பிள்ளை மழலை மொழி போலே
பேச்சுக் குளறும் பிராயத்திலே,
சீறி எழுந்தார் காந்தி மகான்
தேசந் திடுக்கிடச் சேதி சொன்னர் ;
மீறி எழுந்தது வீரம் அப்போ
வீறிட்டு ஒடிச்சு தள்ளாமை.

‘ கொல்லும் கொலையும் விழுந்து வரும்
குருக்ஷேத் திரத்தில் போவேன் ’ என்ருர் ;
‘ குருதி யாறு பெருக் கெடுத்த
கொலைக் களத்துக்குப் போவேன் ’ என்ருர் ;
‘ நவகாளிக்கு நான் போறேன் ’ என்று
நல்ல மகாத்மா சொல்லி விட்டார்.

‘ கற்புக் கரசிகள் கண்ணகிகள்
கண்ணில் வடிந்திடும் கண்ணீரை
அற்புத மானதன் பொன் மொழியால்
ஆற்றித் துடைக்கவே போறேன் என்ருர்.
பத்தினிப் பெண்கள்தங் கண்ணீரைப்
பதறி வடித்திட்ட தேசத்திலே

பாலுங் குறையும் பசுக் குறையும்
பசும் புல் தீப்பட் டெரியும் என்பார் ;
புத்தி தெரியாமல் செய்துவிட்டார்,
புகையும் கோபத்தில் செய்துவிட்டார் ;
சத்தி உருவான தாய்மாரே !
சாதத்தை ஊட்டிய தாய்மாரே !
மண்மாரி பெய்திடச் செய்யாதீர்,
மானம் பொழியவே செய்திடுவீர் ;
தண்மாறிப் போய்விடச் செய்யாதீர்,
தர்மம் தழைக்கவே செய்திடுவீர் ;
நாட்டு மக்கள் செய்த கொடுமைக் கெல்லாம்
நானே மன்னிப்புக் கேட்டிடுவேன்,
நவகாளிப் பெண்கள் கூட்டத்திலே
நானே மன்னிப்புக் கேட்டிடுவேன் ; '

என்ற மொழி கேட்டுத் தேசம் எல்லாம்
ஈ தென்ன சங்கடம் என்றார்கள் ;
சின்ன மதவெறிச் சண்டையிலே
செய்வது நல்லது இல்லை என்றார் ;

காட்டு வழியிலும் காட்டுவழி
கல்லும் முள்ளும் நிறைந்த வழி
நாட்டு வழி கெட்டுப் போகச் செய்த
நவகாளிப் பக்க ரோட்டு வழி ;
அந்தவழியிலே காந்தி மகான்
அன்பர் துணை ஒன்றும் இல்லாமல்,
நொந்த மனிதன் துயர் தீர்க்கும்
நோக்கம் துணையாக் கொண்டவராய்,
வையகம் வாழ்ந்திட வாழ்ந்திட வே
வானமும் பெய்திட பெய்திட வே
தெய்வம் அருள்செய்க செய்திட வே
தேசம் தழைக்கத் தழைத்திட வே,
வந்தார் வந்தார் காந்தி மகான்
வாய்மை உபதேசக் காந்தி வந்தார் ;

செந்தா மரையின் இதழ் போலே
செவ்விய சேவடி நோக வந்தார்.
சாந்தி வருவதைக் கண்டதுமே
சங்கடப் பட்டவர் துயர் மறந்தார் ;
அய்யன் முகத்தினைக் கண்டதுமே
அலறி எழுந்தார் பெண்கள் எல்லாம் ;
மெய்யன்பர் தன்னிரு காதிலுமே
வேதனை சொல்லி அழுதார்கள்.

சாந்த மகாத்மா கண்களிலும்
சாது சனங்களின் கண்களிலும்
பாந்தம் இல்லாத செயல்புரிந்த
பாவிகள் கண்ணிலும் கண்ணீராம் ;
நாட்டைக் கொளுத்திய பகைத் தீயும்
நவகாளி மதவெறித் தீயும்
வீட்டைக் கொளுத்திய பகைத் தீயும்
விழுந்த கண்ணீரில் கழுவி விட்டார்.

நாளைக் கொரு ஊரில் தானிருப்பார்
நாட்டு வழிகள் நடந்திடுவார்
வேளைக் கொரு வீட்டில் கைஏந்தி
விரும்பித் தந்ததைப் புசித்திடுவார் ;
காந்தி மகாத்மா தான் நடந்தார்
சத்திய போதகன் வழிநடந்தார் ;
ஏந்தி எடுக்கும் திருவடிகள்
இரண்டும் புண்ணுக வழி நடந்தார்.
மாடாடு தன்னை இழந்தவர்கள்
மைந்தரைத் தாயை இழந்தவர்கள்,
வீடுவீடு தேடிச் சென்று, அவர்
வேதனை கேட்டுக் கண்ணீர் துடைப்பார்.
‘அப்பா நடந்தது நடந்திட்டது,
அண்ணன் தம்பியாக வாழ்ந்திடுங்கள் ;
தப்பான காரியம் செய்யாதீர்
தாயாம் பூமி பொறுக்காது ;

'போனது போகட்டும் இனி நீங்கள்
புத்தியுடன் வாழும் ' என்று சொல்லி
ஆனவரைக்கும் அவர் நடுவில்
அன்பை உபதேசம் செய்திடுவார்.
அன்புக் கிரங்கி அழுதார்கள்
ஐயனே வாருங்கள் என்றார்கள் ;
இன்பத்தை வேண்டித் தொழுதார்கள்
எங்களை மன்னிக்க வேண்டும் என்றார்.

அன்புக்கு மேலொரு சாதியில்லை
அன்புக்கு மேலொரு மதமும் இல்லை
அன்புக்கு லோகம் அடங்கும் என்றே
ஐயனின் கண்முன் நடந்தார்கள்.

—கொத்தமங்கலம் ' சுப்பு '

## 2. *புத்தர் மகனை யிழந்த தாயின் மனந்தேறச் செய்தல்*

மூடமான இளமறியை முதுகி லேந்தி
மூவுலகும் கருணையினால் வென்ற வீரன்,
திடமாகப் பலவுயிரும் அளிக்குஞ் சோணைத்
தெய்வநதிக் கரைவந்து சேர்ந்த போது,

*வேறு*

மானைப் பழித்த விழியுடையாள்—ஒரு
மாமயில் போலும் நடையுடையாள் ;
தேனைப் பழித்த மொழியுடையாள்—பெண்ணின்
தெய்வ மெனத்தகும் சீருடையாள் ;

ஆறாகக் கண்ணீர் வடித்து நின்றாள்—கையில்
ஆண்மக வொன்றையும் ஏந்தி நின்றாள்.
தேறாத உள்ளமும் தேற்றுவிக்கும்—ஞான
தேசிகன் சேவடி போற்றி நின்றாள்.

*வேறு*

'சிரித்தமுக மென மலர்ந்து செழித்தசெடி நடுவே
சிறுமகனும் விளையாடித் திரிந்திடுமவ் வேளை,
விரித்தபட மெடுத்தரவொன் றடுத்தொருகை பற்றி
விளங்குமணிக் கடகமென வளைந்துகிடந் ததுவே.

பால்மணமா றுதசிறு பாலகனும் அறியான்
படவரவை விளையாட்டுப் பண்டமெனக் கொண்டான் ;
வாலினையும் தலையினையும் வயிற்றினையும் வலித்து
வருத்தமெழச் சிறுகுறும்பு செய்துவிட்டா னையோ.

சிறுபொழுது சென்றிடஎன் செல்வமக னுடலில்
சீதமிகப் பரந்துணர்வு தீர்ந்துவிட்ட தையா ;
நிறுத்தவிழி ஒருநிலையில் நின்று விட்டதையா ;
நீட்டியகால் மடங்காது நிமிர்ந்துவிட்ட தையா.

*வேறு*

'காடு மலையும் கடந்து வந்தேன் ; உன்னைக்
கண்டு துயரெல்லாம் போக்க வந்தேன் ;
வாடு மலர்ச்செண்டு போற்கிடக்கும்—இந்த
மைந்தன் உயிரெழச் செய்யுமையா.

நெஞ்சிற் கிடத்தி வளர்த்த பிள்ளை—கண்ணில்
நித்திரை நீக்கியான் காத்த பிள்ளை ;
விஞ்சு தவத்தினில் பெற்ற பிள்ளை—என்னை
விட்டுப் பிரிந்தறி யாத பிள்ளை.

பெற்ற வயிறு துடிக்கு தையா—ஒரு
பிள்ளையும் வேறெனக் கில்லை ஐயா ;
உற்ற உறவினர் இல்லை ஐயா—என்மீ(து)
உள்ள மிரங்கிட வேணு மையா.'

*வேறு*

‘ தாயே நின் மனக்கவலை—ஒழிந்திடத்
தக்கநல் மருந்தளிப்பேன் ;
சேயினை எழுப்பிடுவேன்—விளையாடித்
திரியவும் செய்திடுவேன்.
நாவிய கடுகு வேண்டும்—அதுவுமோர்
நாவுரி தானும் வேண்டும் ;
சாவினை அறியாத—வீட்டினில்
தந்ததா யிருக்க வேண்டும்.
பக்கமாம் பதிகளிலே—சென்றுநீ
பார்த்திது வாங்கி வந்தால்,
துக்கமும் அகலுமம்மா—குழந்தையும்
சுகமாக வாழு மம்மா.’

*வேறு*

என்றுரைத்த மொழி கேட்டவ் வேழை, மார்பில்
ஏந்தியணைத் திடுமகனோ டூரி லெங்கும்
சென்றுகடு கிரந்துவெறுங் கைய ளாகித்
திரும்பிமுனி திருவடியைச் சிரமேற் கொண்டு,

*வேறு*

‘ புவியெலாம் நிறைந்த புகழோய் ! புலவர்
கவியெலாம் நிறைந்த கருணையங் கடலே !
ஊரெலாம் அலைந்தேன் ; ஒவ்வொரு மனையும்
ஏறி இறங்கினேன் ; என்குறை உரைத்தேன் ;
ஏழை ஒருமகள்—ஏழை அலாதெவர்
ஏழைக் கிரங்குவர்—என் கதை கேட்டு,
மார்போ டணைத்த மதலையைக் கண்டு,
மாறுக் கண்ணீர் வடிவதை நோக்கி,
ஆறுத் துயரம் அடைந்தனள் இவளெனப்

பரிவு கொண்டென் பக்கம் நின்று,
நாவிக் கொழித்த நாவுரிக் கடுகையும்
அளந்தென் மடியில் அளித்திட வந்தனள் ;
பிள்ளை யென்றிடப் பேயும் இரங்குமே ;
பெண்டிர் இரங்குதல் பேசவும் வேண்டுமோ ?
யானும், இட்ட கடுகை ஏற்பதன் முன்னம்,

" தாயே நீவிர் தங்கும் மனையிது
சாவறி யாத தனிமனை தானோ ?
தந்தை தாயர் தமக்கை தங்கை
மைந்தர் எவரும் மரித்தது முண்டோ ?
உரைத்திடும் " என்றேன் ; உரைகேட் டவரும்,

" வினவிய தென்னை ? விரிநீ ருலகில்
பிறந்தார் மூத்தார் பிணிநோய் உற்றார்
இறந்தார் என்கை இயல்பே அம்மா ;
காலையில் உதித்த கடுங்கதிர்ச் செல்வன்
மாலையில் தளர்ந்து மறைவது மிலையோ ?
இம்மா நிலத்தில் இயற்கையின் குறிப்பெலாம்
அம்மா நீயும் ஆய்ந்திலை போலும் ;
இவள், கணவனை யிழந்த கைம்பெண் ணம்மா ;
இவள், மைந்தனை யிழந்த வறியவ ளம்மா ;
இவள், தமையனை யிழந்த தங்கை யம்மா ;
இவள், மாமனை யிழந்த மருகி யம்மா ;
இவள், அன்னையை யிழந்த அகதி யம்மா ;
இறந்தவர் எண்ணிலர் ; இருப்பவர் சிலரே ;
பிறந்தவர் இறப்பதும் இறந்தவர் பிறப்பதும்
உலகி னியற்கை ஒழித்தலும் எளிதோ ?"
என, ஆங்குத், தேறு மொழிகள் தெரிந்தவை கூறிக்
கண்முன் சான்றுகள் காட்டி நின்றனர்.

யானும், உன், கட்டளை யுணர்ந்து கவலை கைம்மிக
மற்றொரு வீட்டின் வாயிலிற் சென்றேன் ;
அங்குளார், கடுகினை அளந்து கட்டிவைத்(து) "அம்மா
உழுதவர் இந்நாள் உலகில் இல்லை ;
விதைத்தவர் அன்றே விண்ணுல கெய்தினர் ;
காத்தவர் காலமும் கழிந்து விட்டது ;
அடிமையும் இறந்துநா ளைந்தா றுகுது ;
காலனை எவரே கடக்க வல்லவர் ?"
என்று கூறினர், என்செய ? ஐயா !'

வேறு

மங்கைமனத் தெளிவையெலாம் உரைத்த உண்மை
வார்த்தையினுல் அறிந்(து)அவளை நோக்கி, " அம்மா
எங்குமிலாப் பெருள் தேடச் சென்று நீயும்
யான்நினைத்த பொருளினையே பெற்று வந்தாய் ;
தங்குமிந்த உலகியற்கை மாறு தம்மா ;
தனயனைநீ எண்ணிமனம் தளர வேண்டாம் ;
அங்கமெலாம் வாயாக அழுதிட்டாலும்
அவனெழுந்து நின் துயரம் அகற்ற லுண்டோ.

வேறு

" இம்மா நிலத்திவ் வுண்மையெலாம்
யானும் அறியச் செல்கின்றேன் ;
அம்மா ! நீயும் உன்மகனை
அடக்கம் செய்போ " என்றுரைத்தான்,
வெம்மா வினையின் வேரறுத்து
விளங்கும் ஞான ஒளிகண்டிங்கு
எம் மாதவரும் தொழுதேத்த
எழிலார் கமலத் தெழுந்தோனே.

—தேசிக விநாயகம் பிள்ளை

## 3. ஒரு சுயசரிதை

*வறுமை வாழ்வு*

காவிளை யாடும் களிமயில் கடுப்ப
நாவிளை யாடும் நற்றமிழ்க் கவிஞன்,
நெடும்பசி யென்னும் கொடும்புலிக் கிரையாய்
வருத்தமும் பிணியும் வதியும் ஆலயமாய்
படல் கொடு சாத்தும் இடனிலா மனையும்
காய்ந்த புத்தோலை வேய்ந்திடாக் கூரையும்
பொறுக்கறத் தெளித்துப் பெருக்கா முன்றிலும்
பொங்கா அடுப்பும் புகையா அட்டிலும்,
முற்பட முதிர்ந்த பொற்புடைச் சிறுஅர்
ஒருபொழு தாயினும் ஊண்சுவை காணு(து)
இருபொழு தேமாந் திணைக்கவுள் அதைப்ப
எக்கிய வயிறுல் இலைபோல் குழைய
பழந்துணிக் கந்தை பறந்திடை நால,
‘ ஆயே ஆயே ஈயாய் கூழ் ’என
துகிற்றலை பற்றித் தொடர்ந்தழு தரற்றலும்,
காண்டொறும் காண்டொறும் கவலுறு சிந்தையன் ;

*வள்ளலைத் தேடி வருந்தல்*

கல்லா அறிவுடைப் பொல்லா மூர்க்கரை
உப்பு நீர் போன்றும் உவர்ப்புறு செல்வரைக்
கானலை நீரெனக் கருதுபு சென்றென,
வறிதினில் அடுத்துப் பெறுபயன் வேண்டி
வழுவறத் தேர்ந்து வடித்துநன் மதுரம்
தழுவிய நவரசத் தண்டமிழ்ப் பாகைக்
காட்டுக் கெறித்த கதிர்நிலா என்ன,
தொள்ளா மரச்செவி யுள்ளே தூஉய்,
‘ வேளையன் றின்று நாளைவம் ’ என்ன,
போவதும் வருவதும் ஆவதே தொழிலாய்,
உள்ளூற மெலிந்து வெள்ளுடல் கோதாய்த்
திரிதரு நாள்,

வாழையும் பலாவும் மடற்பசும் பூகமும்
தாழையும் மாவும் தழைத்த பூங்காவும்,
குவளையும் கமலமும் குமுதமும் செறிந்து
தவளையும் கயலும் தாவும் வாவிகளும்,
ஆலையும் இளமரச் சாலையும், எங்கணும்
சூழ்ந்து, விண் ணிமையவர் வாழ்ந்தபொன் னுலகம்
நவநிதி யொடுபோந் தவனியில் வந்தெனத்
தரையூர் சிறப்புடை இரையூர் புகுந்தனன்.
வச்சிர கபாடம் வகுத்தநீள் முன்றிலில்
நின்றனன்.
காவலர் ஒருபால், கவிமழை பொழியும்
பாவலர் ஒருபால், பதிந்துசூழ்ந் திருப்ப,
இருந்தவன் விரைந்தாங் கெழுந்தெதிர் வந்தனன்.
'வருக' என் றெருகை இருகையில் தாங்கினன்.
வியப்புடன் உள்ளே பயப்பயக் கொடுபோய்த்
திருத்திகழ் ஆசனத் திருத்தி இருந்தனன்.
விதிவிளை தெறுகலி விடைகொள, அருள் மழை
குதிகொள இணைவிழி குளிர நோக்கினன்.
'கற்றவர் துணையே! உற்றவர் உயிரே!
முதியபாட் டமுதமே! மதுரை வீட் டரசே!'
என்றுசொல் மதுர இயற்றமிழ் இசையொடும்
துன்னுநற் பொருளொடும் சுவைபெறக்கேட்டனன்;
பொருக்கென எழுந்து சரக்கறை திறந்தனன்;
செய்ய பட்டாடை துய்யமென் தூசு
மின்னிய சரப்பணி பின்னுபொன் அரைஞாண்
வேண்டுவ வேண்டுவ விரைந்திவை முதலா
ஆண்டகை கொள்கென அன்பொடு வழங்கினன்;
மாடும் தொழுவும் வயலும் தோட்டமும்
வீடும் விளக்கும் விளங்குறச் செய்தனன்;
ஒருகுறை யில்லா துயர்ந்தனன் எளியேன்.
பெருகிய சுற்றமும் பெண்டிரும் மக்களும்
சூழ்ந்து வாழ்வுற இனி தூழி
வாழ்ந்தவன் புவிமேல் வாழி! வா ழியவே!

—புலவர் ஆற்றுப்படை

# 5. அறநெறி

## நீதிநெறிவிளக்கம்

முற்றும் உணர்ந்தவர் இல்லை ; முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியால்
கல்லும் தகரும் ; தகரக், கனங்குழாய் !
கொல் உலைக் கூடத்தி னால்.

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க ;—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக, கற்றதெல்லாம்
எற்றே இவர்க்கு நாம் என்று.

வாங்கும் கவளத்(து) ஒரு சிறிது வாய்தப்பின்
தூங்கும் களிறோ துயர் உறா.—ஆங்(கு) அதுகொண்(டு),
ஊரும் எறும்பு இங்(கு) ஒருகோடி உய்யுமால்
ஆரும் கிளையோ(டு) அயின்று.

மெய்வருத்தம் பாரார், பசி நோக்கார், கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் ; அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயினார்.

சொல்வன்மை உண்டெனின் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல ;—வல்லைத்தம்
ஆக்கங் கெடுவ(து) உளதெனினும் அஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர்.

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் ! யாவரையும்
வஞ்சித்தோம் என்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கும் உளன் ஒருவன் காணுங்கொல் என்றஞ்சி
அங்கங் குலைவ(து) அறிவு.

## நான்மணிக்கடிகை

மனைக்குப் பாழ் வாணுதல் இன்மை ; தான் செல்லும்
திசைக்குப் பாழ் நட்டோரை இன்மை ; இருந்த
அவைக்குப் பாழ் மூத்தோரை இன்மை ; தனக்குப் பாழ்
கற்றறி வில்லா உடம்பு.

இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம் ;
வளமிலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம் ;
கிளைஞரில் போழ்திற் சினங் குற்றம் ; குற்றம்
தமரல்லார் கையகத் தூண்.

நிலத்துக்கணி என்ப நெல்லுங் கரும்பும் ;
குளத்துக்கணி என்ப தாமரை ; பெண்மை
நலத்துக்கணி என்ப நாணம் ; தனக்கணிதான்
செல்லும் உலகத் தறம்.

## ஏலாதி

சாவ(து) எளி(து) ; அரிது சான்றாண்மை. நல்லது
மேவல் எளிது ; அரிது மெய்போர்த்தல்—ஆவதன்கண்
சேறல் எளிது ; நிலை அரிது. தெள்ளிய ராய்
வேறல் எளிது ; அரிது சொல்.

இடைவனப்பும் தோள்வனப்பும் ஈடின்வனப்பும்
நடைவனப்பும் நாணின்வனப்பும்—புடைசால்
கழுத்தின்வனப்பும் வனப்பல்ல ; எண்ணோ(டு)
எழுத்தின் வனப்பே வனப்பு.

கொல்லான், கொலைபுரியான், பொய்யான், பிறர்பொருள்மேல்
செல்லான், சிறியார் இனஞ்சேரான்,—பல்லார்
மறையிற் செவியிலன், தீச் சொற்கண் மூங்கை,
இறையிற் பெரியார்க்கு, இறை.

## சிறுபஞ்சமூலம்

தான்பிறந்த இல்நினைந்து, தன்னைக் கடைபிடித்துத்
தான்பிற ரால்கருதற் பா(டு) உணர்ந்து—தான்பிறரால்
சாகஎனவாழான் ; சான்றோரால் பல்யாண்டும்
ஆக எனவாழ்தல் நன்று.

வார்சான்ற கூந்தல் ! வரப்புயர வைகலும்
நீர்சான் றுயரவே நெல்லுயரும்—சீர்சான்ற
தாவாக் குடிஉயரத், தாங்கருஞ்சீர்க் கோஉயர்தல்
ஓவாது, உரைக்கும் உலகு.

தேவரே கற்றவர் ; கல்லாதார் தேருங்கால்
பூதரே ; முன்பொருள் செய்யாதார்—ஆதரே.
‘ துன்பம் இலேம், பண்டு யாமே வனப்புடையேம் ’
என்பார் இருகால் எருது.

## திரிகடுகம்

பிறர்தன்னைப் பேணுங்கால் நாணலும், பேணார்
திறன்வேறு கூறின் பொறையும்—அறவினையைக்
காராண்மை போல ஒழுகலும், இம்மூன்றும்
ஊராண்மை என்னும் செருக்கு.

தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன் ;
வேளாளன் என்பவன் விருந்திருக்க உண்ணாதான் ;
கோளாளன் என்பான் மறவாதான் ; இம்மூவர்
கேளாக வாழ்தல் இனிது

வள்ளன்மை பூண்டான்கண் செல்வமும், உள்ளத்(து)
உணர்வுடையான் ஓதிய நூலும், புணர்வின்கண்
தக்க(து) அறியும் தலைமகனும், இம்மூவர்
பொத்தின்றிக் காழ்த்த மரம்.

## நாலடியார்

அறிவ தறிந்தடங்கி, அஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்புடையார், எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது.

‘ எம்மை அறிந்திலிர் ; எம்போல்வார் இல் ’ என்று
தம்மைத்தாம் கொள்வது கோள் அன்று—தம்மை
அரியரா நோக்கி, அறன் அறியும் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள்.

கடையாயார் நட்பிற் கமுகனையர் ; ஏனை
இடையாயார் தெங்கின் அனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன்(று) இட்டஞான் றிட்டதே
தொன்மை உடையார் தொடர்பு.

எனதென தென்றிருக்கும் ஏழை பொருளை
எனதென தென்றிருப்பன் யானும்—தனதாயின்
தானும் அதனை வழங்கான் பயன் துவ்வான்
யானும் அதனை அது.

கூர்த்துநாய் கௌவிக் கொளக் கண்டும், தம்வாயால்
பேர்த்துநாய் கௌவினர் ஈங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ் மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மேல் மக்கள் தம் வாயால் மீட்டு.

## ஔவையார் ஞானம்

வையகம் எல்லாம் வவயலா, வானோர்
தெய்வமா முகடு சேரி ஆகக்,
காணமும் முத்தும் மணியும் கலந்தொரு
கோடானு கோடி கொடுப்பினும், ஒருநாள்
ஒரு பொழுது ஒருவன் ஊண் ஒழிதல் பார்க்கும்
நேர்நிறை நில்லாதென்னும் என் மனனே.
நேர்நிறை நில்லாதென்னும் என் மனனே.

——